rst Thousand.

VOL. XV]. JULY, 1906. REGISTERED.— M. 108 [No. 3.

லேசான காகிதப்பதிப்பு.
தனிப்பிரதி, 5½ அணு.
பழைய பிரதி, 6 „

சந்தாவிலே விவரம்.
ஒருவருஷத்துக்கு ரு. 4
6 மாதத்துக்கு „ 2-2




அறிவைப் பரவச் செய்வதற்கான மாதாந்தரத் தமிழ்ப் பத்திரிகை.

**DEVOTED TO TRUTH AND KNOWLEDGE:**

அறிவுடையாரெல்லாமுடையாரறிவிலா ரென்னுடையரேனுமிலர்.—திருக்குறள்.

**A HIGH THOUGHT REVIEW**
**TAMIL MONTHLY**
*Estd. May 1892.*

கற்க கசடறக் கற்பவை கற்றபின் நிற்கவதற்குத்தக.—திருக்குறள்.

**ILLUSTRATING THE PRINCIPLES OF EDUCATION, PSYCHOLOGY, SOUL-CULTURE & ETHICS, ADAPTED FOR USE IN HOMES & SCHOOLS.**

**Hitch your wagon to a star—Emerson.**

## CONTENTS



## அடக்கம்



**"Our Theism is the Purification of the Human Mind"—Emerson.**

**Thick Paper Edition for Patrons.]** PUBLISHED BY **[Minimum Subscription, Rs. 5;**

**The Secretary, Diffusion of Knowledge Agency,** 2, Sydogy Lane, PYCROFT'S ROAD:

***Anandashrama, Triplicane, Madras.***

**For Satyananda of the Ananda Mission.**

**Thin Paper Edition for the People.]** *Copy-right.* **[Subscription Price: Yearly Rs. 4.**

*"Like a spider, like the earth, and like a living creature He produces the Universe."—Upanishad.*

# MADRAS RAILWAY COMPANY.

TONGA SERVICE BETWEEN COONOOR AND OOTACAMUND.

For the convenience of the public the Madras Railway have arranged to issue on behalf of the Proprietors of the Nilgiri Horse Tonga and Bullock Transit Company. Tonga tickets between Coonoor and Ootacamund at the following rates :—

| Stations. | Special Tonga of 3 seats. | For one seat in a Tonga. |
|---|---|---|
| Coonoor to Ootacamund... | 13 8 0 | 5 8 0 |
| Ootacamund to Coonoor... | 12 8 0 | 5 0 0 |

These tickets will be issud upon the conditions given in the Company's current Coaching Guide pages 119 and 120.

The Railway Company accepts no responsibility for delay, injury or loss to passengers or their baggage.

---

கூனூர் உதகமண்டலம் டாங்கா சவாரி.

பொதுஜன சௌகரியத்தை உத்தேசித்து சென்னை ரயில்வே கம்பெனியார் "நீலகிரி குதிரை, மாட்டுத் தபால்வண்டி கம்பெனி"யின் சொந்தக்காரர்களுக்காக, கூனூருக்கும் உதகமண்டலத்துக்கும் டங்கா டிக்கெட்டு விற்க ஏற்பாடு செய்திருக்கிறார்கள். மேலே கண்டிருக்கிறபடி சார்ஜ் செய்யப்படும்.

ஷை கம்பெனியாருடைய "கோசிங்கைட்" புஸ்தகம் 119, 120-வது பக்கத்தில் கண்ட நிபந்தனைகளை யொட்டி டிக்கெட்டு விற்கப்படும். ரயில்வே கம்பெனியார் இதனால் பிரயாணிகளுக்காவது அவர்களுடைய சாமானுக்காவது நேரிடும் எவ்வித கஷ்ட நஷ்டத்துக்கும் பாத்தியப்பட்டவர்களாகார்கள்.

---

Madras Railway Company,
Agent & Manager's Office,
Royapuram Terminus,
Madras, (6th June, 1906.)

உ

"*Give me not, O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is, but give me, O God, that sublime belief, that seeing evil I yet have faith.*"

Seek Truth wherever you can find it, But, "Make your choice and stick to it till you reach the End.

ஸத்யம்வத.—**Speak the Truth.**

"Hitch your Wagon to a Star."

"To Thine Own Self be True."




அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம்தத்ஸத்.] உ [God is Love : Knowledge is Power: *Om.*

ஸத்யமேஜெயம்—**Satyameva Jayati.**

புத்தகம் 15.] 1906-ம்ஹு ஜூலைமீ. [சஞ்சிகை 3.

# "SRÎMÂTÂ"—"THE HOLY MOTHER."

## ஸ்ரீ ஸப்தமும் ஸ்ரீ வித்யையுமா விளங்கும் உண்மைத் தாய்.

"ஸ்ரீகுரு: ஸர்வகாரணபூதாசக்தி:" என்பது சுருதி வாக்கியம். (பாவனோபநிஷத் முதல் மந்திரம்.) எல்லாவற்றிற்கும் காரணபூதமாயிருக்கிற சக்தியே மேலான ஸ்ரீகுரு. அந்தப்பராசக்தியை "மாதா" =தாய் என்கிற சப்தத்தால் தேவர்களும் ரிஷிகளும் தொழுது வணங்கியிருக்கிறார்கள். இந்த தேகத்தையீன்ற தாயார்கள் ஜீவனுக்குரியதான தாபத்திரியங்களையும் போக்க அசக்தர்களாயிருக்கிறார்கள். தாய்கள் எத்தனை! தந்தைகள் எத்தனை! நான் பெற்ற பிறவிகள் எத்தனை! பெற்றுப் பெற்றலுத்தாள் என்தாயும், பிறந்து பிறந்தலுத்தேன் யானும், இனிப்பிறந்திறவாப் பேரின்பசுகம் பெறுவதென்றோ! என்று மஹான்களெல்லாம் தாபத்திரயங்களின் துன்பம் பொறுக்காமல் கசிந்துருகி வருந்தியிருக்கிறார்கள்.

"நன்றறியேன் தீதறியேன் நானென்று நின்றவனார்
என்றறியேன் நானேழை யென்னே பராபரமே."

"இன்றுபுதிதன்றே யெளியேன் படுந்துயரம்
ஒன்றுமறியாயோ வுரையாய் பராபரமே"

"எத்தனைதான் ஜன்மமெடுத் தெத்தனைதான் பட்டதுயர்
அத்தனையு நீ யறிந்ததன்றோ பராபரமே."

"அன்னையிலாச் சேய்போல அலக்கணுற்றேன் கண்ணுரை
வென்னகத்திற் றுய்போ விருக்கும் பராபரமே."

என்று பெரியோர் இன்னுமெவ்வளவோ கசிந்துருகிப் பாடியிருக்கிறார்கள். பின்னும்:—

"அஞ்சலஞ்ச லென்றடிமைக் கப்போதைக் கப்போதே
நெஞ்சிலுணர்த்து நிறைவே பராபரமே."

"என்னையுன்றன்கைக் களித்தார் யாவரென்னை யான்கொடுத்துப்
பின்னையுன்னுற் பெற்றநலம் பேசேன் பராபரமே."

"வாய்பேசா வூமையென வைக்கவென்றோ நீ மௌனத்
தாயாக வந்தருளைத் தந்தாய் பராபரமே."

என்றும், இவ்வாறாக ஸ்வானுபவத்திலிருந்து மேலோர் செப்பியிருக்கிறார்கள். இதனால் தாபத்திரயங்களாலடிபட்டுத் தவிக்கும் ஜீவனை ஆதிபராசக்தி அன்னையாய் வந்துகாத்து, "தன்னைத் தந்தென்னைத் தடுத்தாண்ட" கருணையங்கடலாம் தாயாக இருக்கிறாள். ஆகையால் அவளை "ஸ்ரீமாதா" வென்றுகொண்டு தொழுது வணங்குவதே எல்லாவற்றிலும் மேலான பூஜையும், யோகமும், ஞானமுமாம்.

"ஆடுவதும் பாடுவது மானந்தமாக வுன்னைத்
தேடுவது நின்னன்பர் செய்கை பராபரமே."

"தானாகவந்து தடுத்தாண்டெனையின்ப
வானாகச் செய்தவின்ப வானேபராபரமே."

என்று இப்படிப் பாடியிருப்பதால், ஸ்வானுபவச் செல்வர்கள் கொண்டாடும் பரமகுரு ஸர்வகாரண பூதமான ஆதிபரா சக்தியோடு அபேதமாகப் பாவிக்கப்படும் பாவனையையுணர்ந்தோரே "ஸ்ரீமாதா" என்னும் நாமத்தின் அருமை பெருமையை யுள்ளபடி யுணர்வார்கள். ஜகன்மாதாவாகிய பராசக்தியொன்றே நம்மைக் காத்திரக்ஷிக்கத்தக்க சக்தியுடையதென்றறிந்தவர்கள் "அழுகிறபிள்ளை பால்குடிக்கு" மென்பதாக அந்த ஆதிபராசக்தியை "அம்மா" என்று வாய்விட்டலறியும், மனதில் நினைத்தும், இதயத்துள் வைத்தும், ஸதாகாலம் பூஜைசெய்து வருவார்கள். ஸ்ரீசப்தத்துக்கு அனேக அர்த்தங்களிருந்தாலும் அவை யெல்லாம்வல்ல அம்பிகையை யொட்டிவந்தனவேயன்றி வேறல்ல. சக்தி இரண்டுவிதம். பின்ன சக்தியென்றும் அபின்னசக்தியென்றும் சொல்வார்கள். பின்னசக்தி யென்பது ஸிருஷ்டித் திதி ஸம்ஹாரார்த்தம் ஆதியில் ஒன்றேயாகவுள்ள சக்தியினின்றும் வேறுபட்டுப்பிரிந்து அவ்வத் தொழிலையியற்றியபின் அதன் காரணத்தில் லயிக்கும் பேதசக்திகளாம். அபின்ன சக்தியென்பது திரோபவானுக்ரகாத்மரக்ஷணார்த்தம் ஏகமாயிருந்து பரிபக்குவமிருந்த ஆக்மாவுக்கு "தாயுமகளு நற்றாரமுமா"யிருந்து காப்பாற்றும் "ஸர்வகாரணபூதாசக்தி"யாம். ஸ்ரீஎன்ற சப்தத்துக்கு லக்ஷ்மியென்றும், ஸரஸ்வதி யென்றும், தாதி (வளர்ப்பவள்) என்றும், தாத்ரி (பூமி) யென்றும், இன்னும் வர்க்கம், ஐசுவரியம், ஜயம், அழகு, ஜீவனம், ஆபரணம், நிர்விஷம், பிரதமை யென்கிற அனேக அர்த்தங்களுண்டு. இத்தனை அர்த்தங்களையும் உள்ளபடிஆராய்ந்து பார்த்தால் எல்லாம் சக்தி ரூபமாகவே விளங்கும். ஆகையால் சுருதியில்

ஸ்ரீசப்தத்தால் "மஹத்துக்களுக்கு அமிர்த வருஷம் பொழிவதாயிருப்பது ஏதுவோ அதுவே ஸ்ரீ"யென்று சொல்லப்பட்டிருக்கிறது. வேதங்களுக்கும் ஸ்ரீயென்றே பெயர். பிரம்மாவை முதலில் சிருஷ்டித்து அவருக்கு வேதங்களை சிறுகச் சிறுகக் கற்பித்த தேவிக்கும் ஸ்ரீயென்றுபேர். இப்படி எத்தனைவிதமாக அதை அர்த்தம்செய்து பார்த்தாலும் அது சக்திரூபமாகவே விளங்குவதாம். அது சக்தியின் பீஜாக்ஷரமாக விருக்கிறது. இந்த ஸ்ரீசப்தத்தின் உண்மையை உள்ளபடி யறிவதற்குக் காரணமாயிருக்கிற வித்தையெதுவோ அதுவே ஸ்ரீவித்யை என்று சொல்லத் தகுந்தது. இந்த வித்யை "இராஜவித்யை" என்று புகழப்படுகிறது. ஏனென்றால் ஸ்ரீசப்தார்த்தத்தை முற்று முணர்ந்தவன் மற்ற எல்லா சப்தார்த்தங்களையும் உணர வல்லவனாகிறான். ஸ்ரீஎன்கிற சப்தமே நாதப்பிரம்மத்தை யுணர்த்துகிறது. இந்த நாதப்பிரம்மத்தோடு ஒன்றுபட்டவன் தானே கிருதகிருத்தியனாகிறான். இதைப்பற்றித் திருமூலர் இத்திருமந்திரோபதேசம் செய்திருக்கிறார் :—

"நாதமுடிவிலே நல்லாளிருப்பது
நாதமுடிவிலே நல்யோகமிருப்பது
நாதமுடிவிலே நாட்டமிருப்பது
நாதமுடிவிலே நஞ்சுண்ட கண்டனே."

இதனால் நாதமுடிவெய்திய ஆத்மா ஸகலஸௌபாக்கியங்களையும் பெற்று மோக்ஷஸாம்ராஜ்யத்தையுமடைகிறான் என்பது சூசிப்பிக்கப்பட்டது. இந்த ஸ்ரீசப்தத்தின் உண்மையை உணர்வதற்கு ஆதார பூதமாயுள்ள ஸ்ரீவித்யையானது உத்தம பாத்திரங்களான மஹா யோகிகளாலேயே அனுஷ்டிக்கப்படத்தக்கது. யோக்கியதைக் குறைவானவர்கள் இந்த வித்யையை அனுஷ்டிக்க அனருகராகிறார்கள். வித்யையின் நோக்கமே குணவிருத்தி. வித்தைகளிலெல்லாம் சிறந்த ராஜவித்தையாம் ஸ்ரீவித்தையை உபாஸிப்பவர்கள் சத்குண சம்பத்து முற்றும் வாய்த்தவர்களாகவிருக்கவேண்டும். அப்படிப்பட்டவர்கள் உபாஸிக்க அனுகூலமாகும் பொருட்டு "ஸர்வகாரணபூதாசக்தி" யாகிய "ஸ்ரீ குரு" வோடு "நவரந்த்ரரூபமான தேகத்தை அபின்னமாக பாவிக்கவேண்டுமென்றுசொல்லக்கருதி சுருதிவாக்கு "தேக நவரந்த்ரரூபோதேஹ:" என்று முறையிடுகிறது. "நவசக்ரரூபம் ஸ்ரீசக்ரம்" என்ற சுருதிவாக்கினால் ஸ்ரீசக்ரமானது நவசக்ரரூபமான தேஹமேயென்று தெரியவருகிறது. இந்த நவசக்ரங்கள் மூலாதார, முதலிய ஆறு ஆதாரங்களும் அவற்றின்மேல் ஊர்த்வஸஹஸ்ரதளகமலம், "அத:"—கீழ் ஸஹஸ்ரதளகமலம், "லம்பிகாக்ரம்" என ஒன்பதாம். இந்த ஒன்பது ஆதாரங்களும் பாவனாமாத்ரமானதாகவின்றி, "தேஹோ தேவாலயப்ரோக்த்" என்ற சுருதிப்படி தேவாலயரூபமான இந்ததேஹத்துக்குஉண்மையாகவேஉள்ளபடியுள்ள நவாதாரங்களாக விருக்கின்றன. இவற்றைப் பிரத்தியக்ஷானுபவத்தில் யோகிகள் அறிந்துகொள்ளக் கூடியதாயிருப்பதோடு, மேற்றிசை சாஸ்திராராய்ச் சிவிற்பன்னர்களில் சிரேஷ்டர்களாயிருப்பவர்களும் ஒருவாறு கண்டுணர்ந்து ஆராய்ந்துவருகிறார்கள். இந்த ஸ்ரீவித்யையின் சாதகத்தால் தேகத்தைப் பூரணமாயுணர்ந்துய்யவழி யேற்படுகிறது. இந்த வழியை எல்லாருக்கும் சொல்வதால் சத்குண சம்பத்தில்லாதவர்கள் கெட்டுப்போவதற்கு வழி யேற்படுமாதலால், அதை அதிரகஸியமாகச் சூசிப்பித்து, "ரகஸிய நாமாவளி"யென்று ஆயிரம் நாமங்களாகச் செய்திருக்கிறார்கள். வாசிநி முதலிய தேவதைகளால் லலிதாம்பாள் உத்திரவுப்

படி செய்யப்பட்டதாகவும் ஹயக்ரீவர் அஹஸ்யருக்கு வெளியிட்டுச் சொன்னதாகவும் ப்ரம்மாண்ட புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த இரகஸியஸஹஸ்ர நாமமாகிய "லலிதாஸஹஸ்ரநாமம்" எல்லாரும் கேள்விப்பட்டதும், கோவில்களில் விசேஷமாய் அர்ச்சனைகள் செய்ய உபயோகிக்கப் படுவதாயுமிருந்தாலும் அதன் மர்மத்தையுணரத் தக்கவர் குருவழிப்பட்டுத் தேர்ந்தவரன்றி மற்றவர்கள் உணரார். இப்படிப்பட்ட அருமையான ஸஹஸ்ர நாமங்களின் இரகஸியத்தை உள்ளபடி போதியுணர ஸ்ரீசக்ரம் இன்றியமையாத சாதனமாம். இதன் இரகஸிய மகிமையை ஒருவாறு சுட்டிக் காட்டினதன்றி மேல்விவரிப்பது அசாத்யமாதலால் இந்தமட்டும் சூக்ஷ்மமாய்ச் சூசிப்பித்ததோடு நிறுத்தலாயிற்று.

ஓம் தத்ஸத்.

——(*)——

## PSYCHIC CURE—A TALE OF THE TIMES.

## ஆத்மவைத்தியம்—ஒரு உண்மையான கதை.

*(By Sri Balasundram.)*

"இதயத்து நாட்டத்து மென்றன் சிரத்துப்
பதிவித்த பாதம் பராபர நந்தி
கதிவைத்தவாறு மெய்காட்டிய வாறும்
விதிவைத்த வாறும் விளம்ப வொண்ணாதே!"—திருமந்திரம்.

குப்பா சாஸ்திரிகள் மயக்கந்தெளிந்து விழிக்குமுன் ஜோதிமதி ஐயர் ஜாக்ராவஸ்தையடைந்து சாஸ்திரிகள் நிலையையறிந்தும் அறியாதவர்போல் சும்மாவிருந்தார். சற்று நேரத்துக்கெல்லாம் சாஸ்திரிகளும் விழித்துக்கொண்டு ஏதோ பிரம்மலோகம்போய் வந்தவர்போல் சுற்று முற்றும் சற்றுநேரம் உற்று உற்றுப்பார்த்தார். கண்ணைத் துடைத்துக்கொண்டார். கைகளைத் தேய்த்துக்கொண்டார். இப்படி திரும்பினர். அப்படி திரும்பினர். பின்னுமொருமுறை நாலு திக்கையும் பார்த்தார். இவ்வளவு சோதனைகளும் செய்துபார்த்துக்கொண்டபின், தான் இருப்பது பூலோகம் தானென்றும் பிரம்மலோகமல்லவென்றும் மனதுள் நிச்சயித்துக்கொண்டு, மிருது வசனமாய், அதிசாந்தத்தோடு பேசத்தொடங்கினர்.

"இப்பொழுது எனக்கு உண்டானதோர் உள்ளனுபவம் மிகவும் அதிசயமாயிருக்கிறது. என் ஆயுளில் நான் இந்தமாதிரியனுபவம் கண்டதில்லை. எனக்குள் ஆள்மாறாட்டம் நிரம்ப உண்டாய்விட்டது. இந்த தேகம் இருக்கிறதோ இல்லையோவென்று இன்னமும் உள்ளுக்குள் சந்தேகமாகவேயிருக்கிறது. இந்த தேகத்தை யாரோ எப்படியோ உருக்கி வார்த்ததாக ஞாபகமிருக்கிறது. என்தேகம் முன்போல் ஜடமாகத் தோன்றவில்லை. ஏதோ ஒளிமயமாக விளங்குகிறாப்போல் தோன்றுகிறது. சிந்தை சலனமற்று சாந்தமாய் அலையற்ற சமுத்திரம் போல் அமர்ந்திருக்கிறது. எந்தக் கவலையும் விசாரமும் தோன்றவில்லை. எதைப் பார்த்தாலும் சுத்தமாகவிருக்கிறது. சுகம் என்பது இன்னதென்று இப்பொழுதுதான் தெரிந்துகொண்டாப்போலிருக்கிறது. ஏதும் பேசப் பிடிக்கவில்லை. மௌனமாயிருந்து உள்ளத்தினுள் கசிந்தூறும் சுகரஸத்தை உண்டு களித்திருந்தால் போதும்! அன்னபானாதி ஆகாரங்களும்கூட வேண்டாம்போலிருக்கிறது. வயிற்றுப்பாடும் சோற்றுவிசாரமும் இவ்வளவு எளிதில் நானறியாமல் என்னைவிட்டோடிப் போமென்று நான் கனவிலும் கருதவில்லை. இது என்னவோ எனக்கு என்றைக்குமில்லாததோர் புதிய அனுபவமாகவிருக்கிறது. இந்த அனுபவமட்டும் மாறாமல் மறக்காமலிருந்தால் எனக்கு

வேறு ஒன்றும் வேண்டியதில்லை. காசுவேண்டாம், பணம் வேண்டாம், பெண்டு வேண்டாம், பிள்ளை வேண்டாம், பேர் வேண்டாம், கீர்த்தி வேண்டாம், உற்றார் வேண்டாம், பெற்றார் வேண்டாம், இந்த சுகானுபவம் ஒன்றுமட்டுமிருந்தால் வேறு எதுவும் எனக்கு லக்ஷியமில்லை.''......என்று இப்படிபேசிக்கொண்டுபோன குப்பா சாஸ்திரிகளைப் பார்த்து ஜோதிமதி ஐயர் புன்சிரிப்புச் சிரித்துக்கொண்டிருந்தாரேயன்றி வேறொன்றும் சொல்லவில்லை.' சற்றுநேரம் பொறுத்து "இப்படியே சுகமாகவிருக்கப் பிரியமானால் இருக்கலாம். அதற்கு இடையூறு செய்வார் யாருமில்லை ஆனால் இன்னும் சிறிதுநேரம் சென்றால் பழையபடி ஆய்விடுவீர். அப்பொழுது என்ன தோன்றுகிறதோ பார்க்கலாம். பூஜைகாலமாய்விட்டபடியால், நான் உள்ளேசென்று பூஜையை முடித்துக்கொண்டுவருகிறேன்—என்று சொல்லிவிட்டு சரேலெனவெழுந்து பூஜாக்ரகத்தினுள்ளே போய்விட்டார்.

* * *

இந்தக் கூத்துகளையெல்லாம் கவனித்துப் பார்த்துக்கொண்டிருந்த ஓதுமதிநாதன் "அப்பாவை 'என்னவோ பழைய கிரந்தங்களைப் படித்துவிட்டு பட்டதும்படாததுமாக உளறுகிறார்'—என்று மிகவும் அலக்ஷியமாய் அந்தரங்கத்தில் நினைத்திருந்தோமே! 'பட்டதும்படாததுமான குறை' நம்மிடத்தில் கிராகிய சக்தி பூரணமாயில்லாத குறையின் விளைவென்றல்லவோ தென்படுகிறது! இதிலெல்லாம் நாம் உணர்ந்தறியமுடியாத ஒருசூக்ஷ்ம சக்தியிருந்தல்லவோ இப்படிபாட்டுகிறது. இந்தசூக்ஷ்மசக்தியை யுணர்ந்துபயோகிக்கும் வழியை அப்பா நாம் நினைத்ததைவிட அதிகமாக அறிந்து அப்பியசித்து வருகிறதாகத் தோற்றுகிறது. இதுவிஷயத்தை நாம் இனி அலக்ஷியமாகத் தள்ளாது நன்றாகக் கவனிக்கவேண்டும். இந்த சாஸ்திரியார் வந்த தடபடல் என்ன! பிந்தியவர் பேசிக்கொண்டிருந்த பேச்சென்ன! அவருக்குண்டான போதையென்ன! இப்பொழுது அவரிருக்கும் அமைதியும் சாந்தமுமென்ன! அவர் முகம்கூட முன்னிலும்இப்பொழுது சோதிவிட்டு விளங்குகிறதாகத் தோற்றுகிறதே! இதெல்லாம் என்ன சொப்படிவித்தையா? அல்லது இந்திரஜாலம், மஹேந்திரஜாலமா?' வித்தையின் பேர் எதுவாயிருந்தாலென்ன! நடந்தது நடந்தபடி உண்மையே! இதில் சூதுவாது ஒன்றுமில்லையென்று நமக்கு நன்றாகத் தெரியும்! இதன் உள்மர்மத்தை விசாரித்தறியவேண்டியது நம் கடமை! அப்பாவிடத்தில் நாம் இங்கிலீஷ்ப் படித்த முறுக்கைக்காட்டினால், அவர் அதற்கு உட்பட்டவர்போல் காட்டி, உண்மையை உணர்த்தாமல் விட்டுவிடுகிறார். நமக்கும் இதில் சிரத்தையுண்டாகவில்லை! இனி பக்தி சிரத்தையோடிருந்து கவனித்து வந்தால், நல்ல சமயம்பார்த்து நமக்கு உண்மையைச் சொல்லாமல் ஒளிக்கமாட்டார். இதுவரையில் அவர் இந்த இரகசியங்களை முற்றும் இரகசியமாகவே வைத்துக் காப்பாற்றி வந்தது நம்முடைய குற்றமேயன்றி அவருடையதல்ல! அப்பியசிக்காத சாஸ்திரம் விஷத்துக்கு சமானம் என்று அவர் அடிக்கடி சொல்லியிருக்கிறார். இதனால் ஆசார அனுஷ்டானமும் பக்தி சிரத்தையும் நம்மிடத்தில் இல்லாத குறையினாலேயே அவர் இந்த மஹா இரகசியங்களை நமக்குச் சொல்லாமல் மூடிவைத்திருக்கலாம். இனி நாம் நடத்தையைத் திருத்திக்கொண்டு, இந்த இரகசியங்களின் உண்மையை உள்ளபடி விசாரிக்கவேண்டுமென்று தனக்குள் தானே பேசித் தீர்மானித்துக்கொண்டான்.

* * *

குப்பா சாஸ்திரிகள் தாமனுபவித்த ஆனந்த சுகத்தை நினைத்து மனப்பால் குடித்துக்கொண்டிருக்க, ஓதுமதிநாதன் தான் இதுவரையில் இந்த மேலான மனோதத்துவங்களின் மர்மங்களை உள்ளபடி பக்தி சிரத்தையோடு கேட்டுக் கிரகித்துக் கொள்ளாமல், ஏதோ இங்கிலீஷ் புஸ்தகங்களில் தான் படித்தறிந்த ஏட்டுப் படிப்பின் பெருமையில் "எருமைமாடு ஜலத்தில் விழுந்தாற்போல்" மூழ்கிக்கிடப்பது சரியல்லவென்றும், அந்த அஹம்பாவத்தைவிட்டு, பக்தி சிரத்தையோடு தன் தகப்பனாரையே குருவாகக்கொண்டு சரணாகதியடைந்து உண்மை விசாரித்துணரவேண்டுமென்றும் தனக்குள் தானே யாலோசித்துத் தீர்மானம்செய்துகொண்டிருக்க, ஜோதிமதி ஐயர் பூஜாக்கிரகத்தினுள்ளே பஹிர்முகமாகச் செய்யவேண்டிய சொற்ப உபசாரங்களை அனுஷ்டான

சம்பிரதாயத்திற்குக் குறைவுவராமல் செய்து முடித்துவிட்டு தன்னெதிரிலிருந்த ஸ்ரீசக்கரத்தைத் தியானித்துக்கொண்டு சிறிதுநேரம் நிஷ்டையிலிருந்து சமாதிகூடிக்கலைந்தபின் பாவனோபநிஷத் பாராயணம்செய்துகொண்டிருந்தார். ஓதுமதிநாதன், தகப்பனார் குரல் காதில் விழவும், புதிதாயவனுக்குண்டான பக்திசிரத்தையில், சட்டென்றெழுந்து கால் கைகளை யலம்பிக்கொண்டு ஆசமநீயம்செய்து அந்தரங்கத்தில் காயத்ரீ மந்திரத்தை ஜபித்துக்கொண்டு பூஜாக்ரகத்திற்கு வெளியிலிருந்து அப்பா பாராயணம் செய்வதைக் கவனித்து சிரவணம் செய்துகொண்டிருந்தான். பி. ஏ. க்கு ஸம்ஸ்கிரதம் இரண்டாம் பாஷையாகவெடுத்துக்கொண்டு படித்தவனுதலால், அந்த பாஷையில் விசேஷ பாண்டித்தியமடையாவிட்டாலும், கூடியமட்டும் விற்பத்தியடைந்திருந்தான். ஆகையால், தான் பக்தி சிரத்தையோடு சிரவணம் செய்ததை ஒருவாறு மனதில் கிரகித்துக்கொள்ளும் சக்தி யவனிடமிருந்தது. சிறிதுநேரம் அமர்ந்திருந்து சுத்தஹிருதயத்துடன் தகப்பனார் பாராயணம் செய்வதைக் கேட்டுவரவும், தான் பூஜாக்ரகத்தி னருகிலிருந்து ஏதோ வேத பாராயணம் கேட்டு வருவதாகவின்றி, காலேஜில் ஒரு பெரிய மஹா பண்டிதர் வந்து தேக மனோ தத்துவங்களைப் பற்றி தான் இதுவரையிலும் கேட்டிராதபடி அற்புதரஸம் பொழிய ஆனந்தபரவசமாய்ப் பிரசங்கம் செய்துவருகிறதாகவும், அதைக் கேட்டுத் தானும் இதரமாணவர்களும் பிரமித்து முதலில் சற்று ஸ்தம்பித்தவர்போலிருந்து பிறகு அந்த அற்புத ரஸமொழுகும் ஆனந்தப்பிரசங்க வெள்ளம் எங்கும் நிறைந்து தங்களையெல்லாம் அந்த வெள்ளத்தில் மூழ்கச்செய்ததாகவும், தான் அந்த ஆனந்த வெள்ளத்தில் சுகமாய் மிதந்துகொண்டு அவருடைய அமிர்த வசனமான இளந்தென்றற் காற்றில் அசைந்தாடியமர்ந்திருப்பதாகவும் கனவுகண்டான். இப்படியே வெகுநேரமிருந்து கடைசியில் ஸ்வப்பிரஜ்ஞை வந்ததும், தான் கண்டதும் கேட்டதும் கனவோ நனவோ, அல்லது மந்திரமோ மாயமோவென்று அதிசயித்துக்கொண்டிருந்தான். ஜோதிமதி ஐயர், பாராயாணம் செய்து முடித்து தேவிஸ்தோத்திரம் சொல்லி மங்கள ஆரத்தியெடுக்குங்கால், வீட்டில் எல்லாரும் வழக்கம்போல் தரிசனத்துக்கு வந்தார்கள். அப்பொழுது ஓதுமதிநாதன் என்றைக்குமில்லாதபடி பக்தி மேலிட்டு உள்ளமுருக உளங்குழைந்து நாத்தழுதழுக்க தேவியை ஸ்தோத்திரஞ்செய்து சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்கரித்து வெகுநேரம் அடியற்ற மரம்போல் அப்படியே விழுந்துகிடக்க, அவன் தாயார் இந்த அதிசயாடம்பரத்தைப் பார்த்து அவளுடைய உண்மையான தாயன்பு தூண்டத் தன் மகனைச் சற்று உற்றுநோக்கிப் பார்க்கவும், அவளுடைய உள்ளன்பு என்றுமில்லாதபடி பொங்கியெழ, அவனைப்பெற்ற வயிறு குளிர்ந்து, அவன் முன்போல் சிறு குழந்தையாய் கருப்பத்திலிருந்து நழுவி விழுந்து எடுப்பாரற்றுக்கிடப்பதுபோல் நனவிற்கனவுகண்டு மயிர்க்குச்செடுக்க உடல் கூச, உள்ளம்பொங்கியெழ அன்பின்வசப்பட்டவளாய் ஸ்வப்பிரஜ்ஞையிழந்து பரவசமாய் நின்றாள். அப்பொழுது அந்தம்மாளுடைய முகம் சாக்ஷாத்பரதேவதை ஸ்வரூபமாக விளங்கியது. அதைக்கண்ட ஜோதிமதி ஐயர், உள்ளமுருக "தேவீ பஞ்சஸ்தவீ" ஸ்தோத்திரத்தை வாய்விட்டுச் சொல்லி அம்மனை ஸ்துதித்தார். அப்பொழுது நனவிற் கனவு கண்டுகொண்டிருந்த ஓதுமதிநாதன் தாயார் அது முற்றி நனவிற் சுழுத்தியாம் துரியாவஸ்தையில் அவருடைய மனோபாவ விசேஷத்தால் அந்தம்மாளுக்கு பார்விம்மிப் பால் சுரந்து கச்சை யிறுகக் கட்டியிருந்தாலும் ஐந்து பிள்ளைப்பெற்ற தாயானதினாலும், கசிவுகண்டு கச்சைத் துணியெல்லாம நனைந்துபோகலாயிற்று. அந்தம்மாள் கோர்த்ததை கோர்த்தபடி அஞ்சலிபந்தஹஸ்த பூஷணளாய் அம்மனைத் தியானஞ்செய்து நிற்பவள்போல் நிற்க அவள் காலடியில் தீபாராதனைகாலத்தில் நமஸ்காரம் செய்த ஓதுமதிநாதன் இன்னும் களைதீர்ந்தெழுந்திராது அப்படியே கிடந்தான். இக்கோலத்தையெல்லாம் கண்டு ஜோதிமதி ஐயர், தன்னை மறந்து அம்பாளைத் துதித்துக்கொண்டிருந்தவர் அப்படியே சமாதிகூடி பூரணத்திற் புகுந்து அசைவற்றமர்ந்திருந்தார். ஒரு க்ஷணநேரத்தில், தாய், தகப்பன், பிள்ளை மூவரும் த்ரிதேகரூபிகளாகவிருந்தும் அபேதபாவனைவிசேஷசிந்தனையால் தேவியினிடம் மனோலயப்பட்டு ஏகரஸமாய் ஒன்றுபட்டுக்

கலந்துபோனார்கள். அப்பொழுது கண்ணிருந்து காணக்கிடைத்தவர் கண்ட காக்ஷியானது திரிபுரசுந்தரி காமேசுவரவர் மடியில் உட்கார்ந்துகொண்டிருந்த வைபவத்தை யொத்திருந்தது. தந்தை தாய் மகன் என்கிற மூன்றவஸ்தையும் ஒன்றுபட நின்ற உண்மைச் சொரூபமே திரிபுரசுந்தரி. அவளே லலிதாம்பாள். உபாதிரஹிதமான உண்மைப் பொருளாம் நித்த முத்த சுத்த ஸ்வரூபமே காமேஸ்வரர். இந்த காமேசுவரருக்கும், காமேஸ்வரியாம் லலிதாம்பாளுக்கும் உள்ள சம்பந்தம் காவிக்கும் வஸ்திரத்துக்கு முள்ளதுபோலுள்ள ஸம்யோக சம்பந்தமாகவின்றி 'அவயவ-அவயவி' சம்பந்த ஸ்வரூபமான அபேத சம்பந்தமாம் தாதாத்மிய சம்பந்தமே. இந்த சம்பந்த விசேஷத்தை குருமுகமாக வறிந்து ஸ்வானுபவத்தி லுணர்ந்தா லுணரலாமேயன்றி வேறுவிதமாக உணரலாமென்பது துர்லபம். ஏகமென்றுமில்லாமல் இரண்டென்றுமில்லாமல் இப்படி காமேஸ்வரருக்கும் லலிதேஸ்வரிக்குமுள்ள சம்பந்தம் எதுவோ அதுவே அத்வைத சம்பந்தமென்று வேதங்கள் முறையிட்டுக் கூறும். இது நிற்க. தேவியினிடத்தில் மனோலயமாகி ஏகரஸமாய் அபேதமான தாதாத்மிய சம்பந்தத்திலொன்றுபட்டு நிற்கையில், பரதேவதைபோல் அசைவற்றுப் பரவசமாய் நின்ற அந்த அம்மணியின் கச்சை நனைந்து மிகுந்த பால் அவர் காலடியில் விழுந்து மூர்ச்சித்து முகம் திரும்பிக்கிடந்த ஓதுமதிநாதன் பொட்டில் சொட்டுகளாகச் சொட்டி கன்னத்தின் வழியாய் அவன் கண்களிலும் வாயிலும் அமிர்ததாரை போல்வழிந்தோடின. அவன் கண்கள் நனைந்து வாயில் அதிமதுரமான அமிர்தச்சுவையூறவும், அவன் அம்பிகை தன்னை யெடுத்தணைத்து உச்சிமுகர்ந்து உடம்பெல்லாம் தடவிக்கொடுத்து அமிர்தபானமூட்டி அன்பு பாராட்டிக்கொண்டிருப்பதாகக் கனவுகண்டு விழித்துக்கொண்டான். கனவு தெளியுமுன், தன் தாய் ஆரமுதூற்று வெள்ளம் ஆறாய்ப் பெருக தேவிஸ்வரூபமாய் நிற்பதைக் கண்டு "தாயே, ஈசுவரி, தப்பிதம், தப்பிதம், உன்னையறியாது பிழையிழைத்துப் புன்மதியனானேன். இக்குற்றம் பொறுத்தருளவேணும் தாயே" என்று திடீரென்று வாய்விட்டுக் கதறினான். இதைக்கேட்டு அவன் தாய் திடுக்கிட்டு விழித்துத் தன்னையறியாமல் தன் மகனை வாரி மடியில்வைத்து மாரோடணைத்து உச்சிமுகர்ந்து உடம்பெல்லாம் தடவிக்கொடுத்து, அப்பொழுதுதான் அவனை யீன்றெடுத்தாள்போலும் அன்பு பாராட்டினாள். இதையெல்லாம் அஹத்திலும் புறத்திலும் பேதமின்றி உள்ளபடி யுண்மையுணர்ந்த ஜோதிமதி ஐயர், பார்த்து அடங்கா மகிழ்ச்சி யெய்தி, ஆனந்தமுங்கடந்த ஆனந்தாதீதத்தில் சுத்தசாக்ஷியாக அமர்ந்திருந்து பார்த்திருந்தார். குப்பாசாஸ்திரிகளுக்கு ஒன்றும் தோன்றவில்லை. மறுபடியும் அவர் முன்போல் பிரமித்து ஸ்தம்பித்துப் போயிருந்தார்.

(இன்னும் வரும்.)

——()——

MAHABALIPURAM.

# மகாபலிபுரம்.

சென்னையிலிருந்து தெற்கே செல்லுகிற தென்னிந்தியா இருப்புப்பாதை வழியாக செங்கற்பட்டு சென்றால் ஒன்பதுமைல் தூரத்திலுள்ள திருக்கழுக்குன்றம் என்ற திவ்விய க்ஷேத்திரத்தை ஜட்காவண்டிகள் மூலமாய் சேரலாம். இந்த விடத்திலிருந்து ஒன்பதுமைல் மேற்படி ஜெட்காவிலேயே ஏறிச் சென்றால் யாம் தலைப்பில் குறித்த பூர்வீகமான சரித்திர சம்பந்த முள்ளஸ்தலத்தை யடையலாம். இதற்கு சென்னையிலிருந்து பக்கிங்ஹாம்கால்வாய் வழியாகவும் போட்டுகளின்பேரிலேறி செல்லக்கூடும். ஆனால் கோடைகாலத்தில் இக்கால்வாயில் தண்ணீர் குறைந்திருக்குமாதலால் போட்டுகள் தங்கு தடையின்றிச்செல்வதுமுடியாது. 40-மையில் செல்லவேண்டியிருப்பதால் போட்டுக்காரர்கள் அதிக வாடகை கேட்கிறார்கள். ரயில்மார்க்கமாகச் செல்வதே உத்தமம். திருக்கழுக்குன்றம்விட்டு எட்டுமைல் ஜட்காமீதேறிக்கொண்டு சென்றால், சமுத்திர தண்ணீரினால் முழுகி சுமார் இரண்டு பர்லாங்கு தூரமுள்ள சேற்றுநீரில் நடந்து செல்லவேண்டும். பிறகு பக்கிங்ஹாம் கால்வாயைத்தாண்டவேண்டும். இவைகளைக் கடந்து சுமார் அரைமைல் தூரம் நடந்து சென்றால் மகா

பலிபுரமென்கிற சிறியவூரின் வீடுகள் தென்படுகிறது. வன்னியர் என்ற ஜாதியார் வீடுகள் சுமார் 100-க்கு அதிகமாயில்லை. இவர்கள் சிறிய கூரைவீடுகளைக் கட்டிக்கொண்டும் எருமை, பன்றி முதலிய கால்நடைகளை வைத்துக்கொண்டும் ஊரில் ஒரு புறத்திலுள்ள சிறது புஞ்சைபூமிகளில் விளையும் தானியங்களைக்கொண்டும் ஜீவிக்கிறார்கள். இவர்களைத் தவிர வைஷ்ணவ மதஸ்தர்களாகிய ஆறுபிராமணர்களுடைய வீடுகளும் காணப்படுகின்றன. இவைகளில் சிலவீடுகள் எப்பொழுதும்காலியாகவேயிருக்கின்றன. இந்த ஊரைச்சுற்றி மூன்றுபுறத்திலும் கடல் ஆக்கிரமித்திருக்கிறபடியால் சாகுபடிக்குத் தகுந்த பூமிகளில்லை.

ஊரின் மத்தியில் அழிந்துக்கொண்டுவருகிற ஒரு பெரிய விஷ்ணுவாலயமிருக்கிறது. சுவாமிக்கு தரைசயனப்பெருமாள் என்றும், அம்மனுக்கு நிலமங்கைத்தாயாரென்றும், கூறப்படுகிறது. பக்தகோடிகள் வருவது அதிக குறைவானபடியால் அர்ச்சகர்கள் பூஜை முதலியவைகள் செய்வதும் சிரத்தையுடன் இயற்றப்படுதாவகக் காணப்படவில்லை. ஆலயத்திற்குள் சுவாமி பள்ளிகொண்டிருப்பதுபோன்ற சிலாவிக்கிரகம் அதிக சுந்தரமாயிருக்கிறது. ஆலயத்தின் மதில்சுவர்களும் மற்ற கட்டடங்களும் அழிந்துக்கொண்டு வருகின்றன. உட்பிரகாரத்திலும் நெரிஞ்சிச் செடிகள் மலிந்து பிரதக்ஷணம் செய்பவர்களை வருத்துகின்றன. இது சிற்பசாஸ்திர வேலைகளுக்கு பேர்பெற்ற விடமாதலால் இவ்விடத்தில் யாவரும் பார்க்கக்கூடியதும் பார்க்கவேண்டியதுமான முக்கிய ஸ்தலங்களைக் குறிப்பிடுகிறோம்.—

1. அர்ச்சுனன் தபசு.—மேற்படி ஆலயத்திற்கு வடக்கில் ஒரு குளம்போல் காணப்படுகிற பள்ளத்தாக்கு. ஒருபுறத்தில் சுமார் 30-அடி உயரமுள்ள பாறை. இதில் யானை, மான், மனிதர் முதலிய பல உருவங்கள் அதிக இலக்ஷணமாய் வெட்டப்பட்டிருக்கின்றன.

2. அர்ச்சுனன் தபசுக்கு வடக்கே விநாயகர் ஆலயம். ஒரே கல்லில் வெட்டப்பட்ட சுமார் 30-அடி உயரமுள்ள கோபுரத்தோடு கூடியது.

3. விநாயகர் ஆலயத்திற்கு தென்புறத்திலுள்ள ஒரு பெரும்பாறையில் குடைந்து வெட்டப்பட்ட மண்டபம். சுமார் 18-அடி பாறைக்குள் வெட்டிக் குடைந்தது அதில் ஸ்தம்பங்கள் விடப்பட்டு, உட்புறத்தில் சிற்சில ரூபங்களையுடையது.

4. மேற்படி மண்டபத்திற்கு கிழக்குபாகத்தில் ஒரு சரிவான பாறையின்பேரில் வெகு சிறிய ஆதாரத்துடன் நிற்கப்பட்ட ஒரு குண்டாங்கல், இதை கிருஷ்ணன் உருட்டி எடுத்த வெண்ணெயென்று கூறுகிறார்கள்.

5. பீமன் அடுப்பு.—மேற்படி வெண்ணெய்க்கல்லுக்கு வடபுறத்திலிருக்கிறது. இது மூன்று பெரிய கற்களால் செய்யப்பட்ட ஓர் இடுக்கு. பாறைகளே சுபாவமாயிப்படியமைந்திருக்கிறதென்று கூறலாம். யாதொரு வேலைப்பாட்டையும் காட்டக்கூடியதன்று.

6. எசோதை தயிர்த்தொட்டி.—இது ஒரு பாறையில் ஆறுகஜ சுற்றளவுள்ளதாயும் மூன்றுகஜ ஆழமுள்ளதாயும் வெட்டி குடையப்பட்ட கற்தொட்டி. ஏறி மேலே செல்லும்படி ஒருபுறத்தில் மூன்று படிகளும் வெட்டப்பட்டிருக்கின்றன.

7. மண்டபங்கள்.—ஒரு பெரும்பாறையில் குடைந்து வெட்டப்பட்ட மூன்று மண்டபங்கள். இவைகளுக்குட்புறத்தில் சிற்சில ரூபங்கள் விளங்குகின்றன.

8. ஜோடி மண்டபங்கள்.—மேற்படி மண்டபங்களைக் கடந்து சுமார் கால்மைல் தூரம் தெற்கே சென்றால் காணக்கூடியது. ஒரு பெரும்பாறையில் குடைந்து வெட்டப்பட்ட மண்டபங்கள். 25-அடி அகலமும் 45-அடி நீளமுமுள்ளது. இரண்டு வரிசையான தூண்களையுடையதாயும், ஒவ்வொரு மண்டபத்திலும் ஐந்தைந்து சிறிய அரைகளைக்கொண்டதாயுமிருக்கிறது. ஒவ்வொரு அறையின் எதிர்சுவரான பாறையில் சிற்சில ரூபங்கள் செதுக்கப்பட்டிருக்கின்றன.

9. இரண்டு கல்ரதம்.—மேற்படி மண்டபங்களுக்கு தென்கிழக்கிலுள்ள கல்ரதம். ஒரே பாறையில் வெட்டப்பட்டது. ஒவ்வொன்றும் 25-அடி உயரமும் 12-அடி நீளமும் 12-அடி அகலமுமுள்ளது.

(இன்னும் வரும்.)

டி. ஸி. வேங்கடரமணய்யர்.

# HAMLET, THE TRANSCENDENTALIST.

(FROM SHAKESPEARE.)

# ஹேமசந்திரஸிங் என்னும் ஆத்மவிசாரி.

(ஆங்கிலத்தின் மொழிபெயர்ப்பு.)

*By Sri Rajanayaki.* (ஸ்ரீராஜநாயகி.)

காக்ஷி–5.

இடம்:—தாழ்வாரத்தின் வேறொரு பாகம்.

காலம்:—இரவு மூன்றாவது ஜாமம்.

(ஹேமசந்திரஸிங்கும் பிதிரு தேவதையும். வருகிறார்கள்.)

ஹேமசந்:—என்னை எங்கே அழைத்துக் கொண்டு போகிறாய்? இதற்குமேல் என்னால் வரமுடியாது.

தேவதை:—என்னைக் கவனி.

ஹேமசந்:—கவனிக்கிறேன்.

தேவதை:—நான் திரும்பிப்போகவேண்டிய நேரமாகிவிட்டது! யமதூதர்களெல்லாம் பொழுதுவிடிகிற சமயத்துக்கு என்னை இழுத்துக்கொண்டு போய்விடுவார்கள்.

ஹேமசந்:—ஐயோ! என்னப்பா!

தேவதை:—என்னைக்குறித்துப் பரிதபிப்பதில் பிரயோசனமில்லை. நான் சொல்வதை செவிகொடுத்துக் கேட்டு அந்தப்படி செய்.

ஹேமசந்:—மேலே சொல்லு!

தேவதை:—கேட்டபிறகு நான் சொல்லுகிறபடி நீ பழிதீர்க்கவேண்டும்.

ஹேமசந்:—எதை?

தேவதை:—நான் இறந்துபோன உனது தந்தை; இப்பொழுது சூக்ஷ்ம சரீரத்தோடு இருக்கிறேன். இரவில் கொஞ்சகாலம் நான் இருக்கும் இடத்தைவிட்டு வெளியே போய் மானிடர் கண்ணுக்குப் புலப்படும்படி திரிந்துவர எனக்கதிகாரமுண்டு. நான் இப்பொழுது படுந்துன்பங்களைச் சொல்ல ஆரம்பித்தால், நீ உடல் நடுங்கி மயிர்க்கூச்செடுத்து ரத்தக்கண்ணீர் விடுவாய். ஆனால் அவைகளை வாய்விட்டுச் சொல்ல எனக்கதிகாரமில்லை. என் பழைய வினைகளைப் போக்கிக்கொண்டிருக்கிறேன் என்று மட்டும் தெரிந்துகொள். நீ என்னிடத்தில் பிரியம்வைத்திருந்தது உண்மையானால்—

ஹேமசந்:—சந்தேகமென்ன!

தேவதை:—என்னை அக்கிரமாகக் கொன்றவர்களை—

ஹேமசந்:—கொன்றவர்களா!

தேவதை:—பழிதீர்க்கவேண்டும்;

ஹேமசந்:—கொலையா! அக்கிரமமா!

தேவதை:—வெகு அக்கிரமமான கொலையாக்கும்!

ஹேமசந்:—உடனே சொல்லு! நான் மனோவேகமாக உனக்கு ஆகவேண்டிய காரியத்தை முடிக்கிறேன்.

தேவதை:—அதுதான் சரி! அதுகூடத்தான் செய்யாவிட்டால் நீ என் புத்திரன் என்பதற்கென்ன அடையாளம்? நான் உத்யானத்தில் தூங்கிக்கொண்டிருக்கையில் என்னை ஒரு பாம்பு கடித்து நான் இறந்துவிட்டதாக நாடெங்கும் பிரஸ்தாபம்! இது ஊரார் கண்ணில் மண்ணைப்போடுகிற பெரும்பொய்! வாஸ்தவத்தில் என்னைக்கடித்த பாம்புதான் இப்பொழுது சிம்மாஸனமேறி இருக்கிறது.

ஹேமசந்:— ஆ! நான் அப்பொழுதே சந்தேகப்பட்டேனே! சிற்றப்பனோ! ஆ!

தேவதை:—அந்த துரோகிதானப்பா, படுபாவி! ஆசைவார்த்தைகளினாலும், பொய்சத்தியங்களினாலும், நயவஞ்சகமாக உன் தாய் மனதைக் கவர்ந்து அவளைத் தன்வசப்படுத்திக்கொண்டான்! என்ன அநியாயம்! இந்தப் பூனையும் இந்தப்பாலைக் குடித்திருக்குமா எனத் தோற்றுவாள்! நான் அவளைப் பஞ்சபூத சாக்ஷியாய்த் தொட்டபொழுது சொன்னசொல் தவறாமல் நான் வாழ்நாள்முழுவதும் இல்லறம் நடத்திவந்தேன். திடீரென்று அவள் என் கால்தூசி பெறாத நீசப்பயலிடத்தில் அபிமானம் வைத்தாள். பதிவிரதையான தமயந்தியானவள் முப்பத்துமுக்கோடி தேவதைகளும் நளனைப்போல் வேஷம்போட்டு வந்தாலும் உண்மையான நளனைவிடாமல் பிடித்துக்கொண்டாள். அர்ச்சுனனுக்கு வாழ்க்கைப்பட்டாலும் வியபிசாரம் போகிறவள் வேறொருவனைத்தான் தேடுவாள்! நல்லது, சுக்கிரோதயமாகிவிட்டது, சீக்கிரமாகச் சொல்லுகிறேன், கேள்:—நான் ஒருநாள் சாப்பிட்டுவிட்டு வழக்கம்போல் உத்தியானத்தில் படுத்துறங்குகையில் உன் சிற்றப்பன் கரிநாகப்பாம்பின் விஷத்தைக் கொண்டுவந்து என் காதிலிருந்த ஒரு காயத்தில் நன்றாய்த் தேய்த்துத் தடவிவிட்டான். உடனே பாலில் எலுமிச்சை ரசம்விட்டதுபோல்என் ரத்தமெல்லாம் உறைந்து கறுத்துக் கைகால்களெல்லாம் வீங்கி வாய்திறந்து பேசமாட்டாது மூர்ச்சையிட்டு நான் மாண்டேன். இப்படி ஒரு சகோதரன் மூலமாக உயிரையும் தாரத்தையும் ராஜ்யத்தையுமிழந்தேன். நான் உயிரோடிருக்கையில் பரலோகத்தைப்பற்றி சிந்தித்தவனல்லன். திடீரென்று துர்மரணமடைந்தமையால் என் பாபங்களுக்கெல்லாம் யாதொரு பிராயச்சித்தமும் பூமியில் செய்யவில்லை—இப்பொழுது பிதிருலோகத்தில் வட்டியும் முதலுமாய் அனுபவிக்கிறேன்! ஐயோ, அநியாயம்! அநியாயம்!! உனக்குக் கொஞ்சமாவது ரோஷமுண்டானால், நீ இனி இதைப் பார்த்துக்கொண்டிருக்காதே! உதயபுரி ராஜ்யத்து அந்தப்புறம் இப்படிப் பாழாகலாமா? இதை நீயும் பார்த்துக்கொண்டிருப்பாயா? ஆனால் நீ உன் சிற்றப்பனை என்ன செய்தபோதிலும் உன் தாயைமட்டும் தொடாதே! அவளைத் தெய்வத்தின் தண்டனைக்கும் அவளுடைய மனதின் தண்டனைக்கும் விட்டுவிடு! நேரமாகிறது! கிழக்கே வெளுத்துவிட்டது—நான் போகிறேன்—மறவாதே! (என்று மறைந்துவிடுகிறது.)

ஹேமசந்:—சகல தேவர்களும் கேளுங்கள்! ஆகாசவாணியே, கேள்! பூமியே கேள்! நரகத்தையுங்கூட கேட்கச் சொல்லட்டுமா? ஹிருதயமே பதறாதே, நெஞ்சே துடிக்காதே! நரம்பு நாடிகளே, என்னை இவ்வளவு சீக்கிரத்தில் கிழவனாக்கிவிடாமல் பொறுத்துக்கொள்ளுங்கள்! 'மறவாதே' என்றா சொன்னாய்? உன்னை மறந்து நான் உயிரும் வைத்திருக்க முடியுமோ! ஞாபகமா? இனி என் மனதிலிருந்து இதுவரையில் நான் படித்த படிப்புகளையும் நான் பார்த்த உருவங்களையும், நான் எண்ணின எண்ணங்களையும் அடியோடே மறந்துவிடுகிறேன். நீ சொன்ன ஒரு சொல் தவிர வேறொன்றையும் நினையேன். இது சத்தியம்! அடி சண்டாளி! அடே, குடியைக் கெடுக்கிற உதட்டுச் சிரிப்புப் "படவா!" ஆம், இதைக் கட்டாயம் என் கை புஸ்தகத்தில் எழுதிக்கொள்ளவேண்டும்! இது ஒரு பெரிய உண்மை! ஒருவன் சிரித்து சிரித்தே குடியைக் கெடுக்கலாம் என்பது பெரிய உண்மை! வேறெங்குமில்லாவிட்டாலும் இந்த தேசத்தில் அது உண்மைதான்! (கைப்புஸ்தகத்தைத் திறந்து எழுதிக்கொள்ளுகிறான்.) நல்லது சிற்றப்பா, அப்படி அந்த மூலையில் நீயுமிரு! உன்னையும் மறக்கவில்லை. ஒரு கை பார்த்துக்கொள்ளுகிறேன்! சத்தியம்கூடச் செய்திருக்கிறேன்!

மார்க்க, ஹரிரா :—(திரைக்குள்ளிருந்து) சுவாமி, எங்களாண்டவனே!

மார்க்க :—(திரைக்குள்ளிருந்து) யுவராஜ!

ஹரிரா :—(திரைக்குள்ளிருந்து) அவரைக் கடவுள் காப்பாற்றுவாராக.

ஹேமசந் :—ததாஸ்து!

ஹரிரா :—(திரைக்குள்ளிருந்து) சுவாமி, தங்களைத்தான் கூப்பிடுகிறேன்!

ஹேமசந் :—ஓகோ! என்னைத்தானு! சும்மா வாருங்களையா! இப்படித்தானே வாருங்கள்! பயப்படவேண்டாம்!

(ஹரிராஜஸிங்கும் மார்க்கசேனனும் வருகிறார்கள்.)

மார்க்க :—தங்களுக்கு யாதொரு அபாயமுமில்லையே?

ஹரிரா :—என்ன சமாசாரம்? (தனக்குள்) இந்த அரை நாழிகைக்குள் 18-வயதிலிருந்து 25-வயதாகிவிட்டாரே!

ஹேமசந் :—வெகு ஆச்சரியம்!

ஹரிரா :—எனக்குக் கொஞ்சம் சொல்லக்கூடாதா?

ஹேமசந் :—நீங்கள் வெளியிட்டு விடுவீர்கள்!

ஹரிரா :—நிச்சயமாய் வெளியிடுகிறதில்லை.

மார்க்க :—நானுமில்லை, சுவாமி!

ஹேமசந் :—நல்லது இருக்கட்டும்; இப்படியிருக்குமென்று யாராவது கனவிலும் நினைத்திருப்பார்களா? நிச்சயமாய் வெளியிடமாட்டீர்களே?

மார்க்க, ஹரிரா :— சத்தியமாயில்லை சுவாமி!

ஹேமசந் :—சொல்லுகிறேன் கேளுங்கள்: இந்த தேசத்திலுள்ள போக்கிரிகளுக்குள் யாருக்கு முதல் தாம்பூலம் கொடுக்கவேண்டுமென்றால், சிரித்துச் சிரித்துக்குடியைக் கெடுக்கிற பொறுக்கியெடுத்த போக்கிரிக்குத்தான்!

ஹரிரா :—இந்த சங்கதியைச் சொல்லுகிறதற்கு சுவாமியும் பூதமும் வரவேண்டுமா?

ஹேமசந் :—அதுதான் சரி! ஆதலால் இதை நான் உங்களுக்குச் சொல்லவேண்டியதில்லையே! நீங்களே அறிந்துகொள்ளலாமல்லவா! உங்களிருவருக்கும் அநேக நமஸ்காரம், போய் வாருங்கள்! உங்களுக்கெவ்வளவோ வேலைகளிருக்கும்! ஒவ்வொருவனுக்கும் ஒவ்வொரு வேலையை ஏற்படுத்தி இருக்கிறார் கடவுள்! நானும்போய் அவரை தியானம் செய்யவேண்டும்!

ஹரிரா :—என்னவோ தாறுமாறாய்ப் பேசுகிறீர்களே! சுவாமி!

ஹேமசந் :—நான் சொல்வது உங்களுக்கே தாவது தப்பிதமாக இருந்தால் என்னை மன்னியுங்கள்!

ஹரிரா :—தப்பிதம் யாதொன்றுமில்லை, சுவாமி!

ஹேமசந் :—அப்படிச்சொல்லாதேயுங்கள், ஹரிராஜரே, உலகம் முழுவதும் ஒரேபெரிய தப்பிதமாக விருக்கிறது! இப்பொழுதுதோன்றின உருவமட்டும் யோக்கியமான தேவதைதான்! அதனிடத்தில் தப்பிதமில்லை! எனக்கும் அதற்கும் நடந்தவிவகாரம் உங்களுக்கு அவசியம் தெரியவேண்டிய விஷயமல்ல! நீங்கள் க்ஷத்திரியர்களாகவும் வித்வான்களாகவும் என் சிநேகிதர்களாவுமிருக்கிறபடியால் ஒரு சிறு வேண்டுகோள் செய்து கொள்ளுகிறேன்!

ஹரிரா :—தாராளமாய்க் கேளுங்கள், சுவாமி! செய்யக் காத்திருக்கிறோம்.

ஹேமசந் :—இன்றைக்கு நடந்த விருத்தாந்தத்தை யாரிடத்திலும் சொல்ல வேண்டாம்.

ஹரிரா, மார்க்க :—சொல்லவேயில்லை சுவாமி!

ஹேமசந் :—சத்தியமாய்ச் சொல்லுங்கள்.

ஹரிரா :—நான் சத்தியமாய்ச் சொல்கிறேன்: "சொல்லவில்லை!"

மார்க்க :—நானும் சத்தியமாய்ச் சொல்லுகிறதில்லை!

ஹேமசந் :—இந்தக் கத்தியைத் தொட்டு சத்தியம் பண்ணுங்கள்.

மார்க்க :—நாங்கள் முன்னமே செய்துவிட்டோமே!

தேவதை :—(திரைக்குள்ளிருந்து) சத்தியம்செய்!

ஹேமசந் :—இங்கேயும்கூட வந்துவிட்டா யா! உங்களிருவருக்கும் அது சொல்லுகிறது கேட்கிறதா? சத்தியம் செய்யுங்கள்!

ஹரிரா :—என்னவென்று சத்தியம் செய்யவேண்டும், சுவாமி?

ஹேமசந் :—இன்று நடந்ததைப்பற்றி ஒருநாளும் பேசுகிறதில்லை (என்று தன்கத்தியைக் கொடுக்கிறான்.)

ஹரிரா, மார்க்க :—(கத்தியைத்தொட்டு) இன்று நடந்ததைப்பற்றி நாங்கள் சத்தியமாய் ஒருநாளும் பேசுகிறதில்லை!

தேவதை :—(திரைக்குள்ளிருந்து) அப்படித்தான்!

ஹேமசந் :—எங்கே போனாலும் கூடவே வருகிறது!

ஹரிரா :—இது வெகு அதிசயமாயிருக்கிறதே!

ஹேமசந் :—ஹரிராஜரே, நீங்கள் மகா வித்வான் என்பது வாஸ்தவந்தான்! ஆனால் நீங்கள் படித்திருக்கும் வேதங்களிலாவது, தத்துவங்களிலாவது, சாஸ்திரங்களிலாவது கனவிலும் அகப்படாத அதிசயங்கள் உலகத்திலிருக்கின்றன வென்பது நிச்சயம்! நல்லது இனி நான் என்ன வேஷம் போட்டாலும் சரி, என்ன கோணங்கிகள் செய்தாலும் சரி, எப்படித் தாறுமாறாய் நடந்துகொண்டாலும் சரி—ஏனெனில் இனி நான் இப்படியெல்லாம் செய்யவேண்டி வந்தாலும் வரும்—நீங்கள் ஒன்றுக்கும் வாய்திறக்கக்கூடாது; கை ஜாடைகள், தலையசைத்தல் முதலிய சேஷ்டைகளினாலாவது, "எங்களுக்குத் தெரியும், வெளியிடக்கூடாது" என்றாவது "அது, விஷயம் வேறு," என்றாவது, "இதிலேதோ ரகஸியமிருக்கிறது" என்றாவது "அப்பா களஞ்சியத்துக்குள்ளில்லை" என்று உளறாமல் என்னைப்பற்றி உங்களுக்கு யாதொன்றும் தெரியாதுபோலும் எனக்கும் உங்களுக்கும் யாதொரு சம்பந்தமுமில்லைப்போலும் மௌனமாகவிருக்கிறோமென்று சத்தியஞ் செய்யுங்கள்.

தேவதை :—(திரைக்குள்ளிருந்து)—சத்தியம் செய்யுங்கள்!

ஹேமசந் :—சும்மா இரு, இனி பயமில்லை. (ஹரிராஜவிங், மார்க்கசேனனிருவரும் கத்தியைத் தொட்டு சத்தியம் செய்கிறார்கள்)—இனி என் நேசத்தைமட்டும் மறவாது போய் வாருங்கள்! என்னைப்போலொத்த எளியவன் உங்களுக்குச் செய்யக்கூடியது ஏதாவது உண்டானால், என்னால் வஞ்சனையில்லாது செய்யக் காத்திருக்கிறேன்—நாம் மூவரும் சேர்ந்தே போவோம்! வாயைமட்டும் திறக்கவேண்டாம்! காலம் கெட்டுக்கிடக்கிறது! அதைச் சீர்திருத்த நான்தானா அகப்பட்டேன்! ஐயோ தெய்வமே, குருவியின் தலையிலா பனங்காயை வைக்கிறது! போவோம் வாருங்கள்! (எல்லோரும் போய்விடுகிறார்கள்.)

(முதல் அங்கம் முற்றிற்று)

---

## இரண்டாவது அங்கம்.

### காக்ஷி—1.

இடம் :—புலஸ்தியவர்மாவின் வீட்டில் ஒரு அறை

காலம் :—காலை

(புலஸ்தியவர்மாவும் ராதாகிருஷ்ணனும் வருகிறார்கள்.)

புலஸ்தி :—அவனிடத்தில் இந்தப் பணத்தையும் உண்டிச்சீட்டுகளையும் கொடு.

ராதா :—கொடுக்கிறேன், சுவாமி!

புலஸ்தி :—ஒரு காரியம் செய்தாயானால் நீ புத்திசாலிதான் :—அவனைப் பார்க்குமுன் அவனுடைய நடவடிக்கைகளைப்பற்றி நீ அந்த ஊரில் உளவு விசாரிக்க வேண்டும்.

ராதா :—விசாரிக்கிறதாகத்தான் உத்தேசித்திருக்கிறேன்.

புலஸ்தி :—பேஷ்! அதுதான் சரி! நிரம்ப சரி! நான் சொல்லுகிறது தெரியுமா? டில்லியில் இந்த ராஜ்யத்திலிருந்து போயிருக்கிறவர்கள் எத்தனைபேரிருக்கிறார்கள் என்று முதல் முதல் விசாரி, அவர்களுடைய ஊர்,

பெயர், ஆஸ்தி, உத்தியோகம், எங்கே குடியிருக்கிறார்கள், என்ன காரியமாக இருக்கிறார்கள், யர்ரோடு சகவாசம் செய்கிறார்கள் என்பதெல்லாம் தெரிந்துகொள். இப்படி விசாரிக்கையில் என் மகனுடைய பெயரும் பிரஸ்தாபத்தில் வரும். அப்பொழுது நீ அவனிடத்தில் காரியமாய் வந்திருப்பதாகவாவது, அவனை நன்றாய்த் தெரிந்ததாகவாவது காட்டிக்கொள்ளாதே! கேட்டால் "அவனுடைய தகப்பனார் பந்துக்கள் இவர்களைத் தெரியும். அவனையும் கொஞ்சம் சுமாராகத் தெரியும்." என்று சொல். என்ன! நான் சொல்லுகிறது தெரியுமா?

ராதா :—நன்றாய்த் தெரியும், சுவாமி!

புலஸ்தி :—கவனித்துக்கொள் : "சுமாராகத் தெரியும்." என்ன! "சுமாராக" என்று சொல். "ஆனால் அவனோடு அவ்வளவு அதிக பரிச்சியமில்லை. ஆனால் நான் கேள்விப்பட்டவரையில், இன்ன இன்னமாதிரி நடத்தையுள்ளவன்" என்று சொல்லி அவனைப் பற்றி எவ்வளவு தூஷிக்கலாமோ அவ்வளவு தூஷித்துச் சொல். அவனை அவமதிப்பதாக நீ பயப்படவேண்டாம்! ஆனால் கொலை, களவு முதலிய அடாத காரியங்களையெல்லாம் அவன்பேரில் நீ பொய்யாகக் கற்பிக்காமல், பாலியத்துக்குரிய அற்பக் குற்றங்களும் சேஷ்டைகளும் மட்டும் உள்ளதாக ஒப்புக்கொள்.

ராதா :—ஒரு சூதாட்டம் முதலியதுகள்! இல்லையா?

புலஸ்தி :—அடே சூதாட்டம், சிநேகிதர்கள் சேர்ந்தால் மதுபானம் செய்தல், மல்லயுத்தத்திற்குப்போதல், கோவில் உத்ஸவங்களில் தாசிகளைக்கண்டு சிரித்தல்—அதற்கு மேல் வேண்டாம்.

ராதா !—அப்படிச்சொன்னால் அவரை அவரை அவமதிப்பதல்லவா?

புலஸ்தி :—அப்படியல்ல, எல்லாம் சொல்லுகிற மாதிரியிலிருக்கிறது! அவன் குல ஸ்திரீகளைக் கெடுத்ததாகவாவது குடித்துவிட்டுத் தெருவில்விழுந்து புரண்டதாகவாவது அபிப்பிராயமுண்டாகும்படி ஒன்றும்சொல்லாதே—"பாலியத்திலிப்படி இருப்பது சகஜந்தான்; கொஞ்சம் வயதானால் தானே திருந்திவிடுவான்" என்ற அர்த்தமாகும்படி—அப்படி—பட்டதும் படாததுமாய்ச் சொல்லவேணும். தெரிந்ததா, நான் சொல்லுகிறது?

ராதா :—ஆனால் ஒரு சந்தேகம், சுவாமி!—

புலஸ்திய :—ஏன் இப்படி விசாரிக்கவேண்டும் தெரியுமோ?

ராதா :—அதைத்தான் நானும் கேட்கிறேன், சுவாமி!

புலஸ்திய :—ஆ! அப்படிக்கேள்! இதுதான் நான் போகிறவழி! இது கொஞ்சம் அனுபவமில்லாதவர்களுக்கு அவ்வளவு சீக்கிரத்தில் பிடிபடாது: மேற்சொன்ன குணதோஷங்களைக் கேட்டதும், அவைகளில் ஏதாவது என் மகனிடத்தில் உண்மையாகக் காணப்பட்டிருக்குமாயின், உன்னோடு பேசுபவன் அதை இம்மாதிரி ஒப்புக்கொள்வான்: எப்படியெனில்:—"ஐயா, நண்பரே, சுவாமி, மகாராஜா," என்று இல்லையா, தேசாசாரத்துக்குத் தகுந்தபடி ஒருவரையொருவர் கூப்பிட்டுக்கொள்ளுதல்!

ராதா :—ஆம், சுவாமி!

புலஸ்திய:—அப்புறம், அவன்—அப்புறம் வந்து—என்ன சொல்ல வந்தேன் என்னவோ சொல்ல இருந்தேனே! கடைசியில் எங்கே நிறுத்தினேன்?

ராதா :—"இம்மாதிரி ஒப்புக்கொள்வான்: நண்பரே, ஐயா, சுவாமி, என்று தேசாசாரத்துக்குத் தக்கபடி!"

புலஸ்திய :—ஆம்! ஆம்! இம்மாதிரி ஒப்புக்கொள்வான்: "நீர் சொல்லுகிற பிள்ளையாண்டானை எனக்குத் தெரியும்! நேற்றோ அதற்கு முந்தின நாளோதான் பார்த்தேன்; இன்னதினத்தில், இன்ன ஆசாமிகளோடு திரிந்தான்; நீர் சொல்லுகிறபடி தான் இன்ன இடத்தில் சூதாடி போலீஸ்காரர்களிடத்தில் அகப்பட்டுக் கொண்டான்—இன்னாரோடு குஸ்திக்கு நின்றான்—இன்ன கடைக்காரனிடத்தில் இவ்வளவு கடன் பட்டிருக்கிறான்" என்றாவது அல்லது "இன்ன தெருவில் இன்ன கதவிலக்கமுள்ள வீட்டில் இந்நேரத்தில் நுழைந்தான்" என்றாவது உண்மை வெளியாகிவிடும். என் மகனிடத்தில் இம்மாதிரிக் குற்றங்கள் ஒன்றுமில்லாமற்போய்,

உன்னோடு பேசுகிறவனும் "அந்தமாதிரி நடவடிக்கைகள் ஒன்றுமில்லை" என்று விடுவானாயின் நீ பொய் சொன்னதினால் ஒன்றும் நஷ்டமில்லை. "அப்படியானால் நான்சொன்ன பெயர்வழிவேறு" என்று நீ சொல்லி சமாளித்துக்கொள்ளலாம், தெரிந்ததா? நம்போல் உலக அனுபவத்தில் அடிபட்டவர்கள் இப்படித்தான் பொய்யைக்கொண்டு உண்மையைக் கண்டுபிடிக்கிறது! கோணல் வழியைப் பற்றிக்கொண்டு நேர்வழிக்குவந்து சேருகிறது! என்ன, நான் சொல்லுகிறதெல்லாம் கொஞ்சமாவது மனதில் நுழைந்ததா?

ராதா:—தெரிந்தது சுவாமி!

புலஸ்தி:—நல்லது, க்ஷேமமாய்ப் போய் வா!

ராதா:—நமஸ்காரம் சுவாமி!

புலஸ்தி:—நீயும் அவனுடைய நடவடிக்கைகளைக் கொஞ்சம் கவனித்துப்பார்.

ராதா:—கவனிக்கிறேன், சுவாமி! (கொஞ்சதூரம் போகிறான்)

புலஸ்தி:—சங்கீதத்தை நன்றாய் அப்பியாசம் செய்யச்சொல்லு.

ராதா:—அப்படியே சுவாமி! (என்று போய்விடுகிறான்)

புலஸ்தி:—நல்லது, பையா!

(உத்பலாக்ஷி வருகிறாள்.)

என்னடி, குட்டி! என்ன அவசரம்?

உத்பலா:—அப்பா, அப்பா, எனக்கு ரொம்ப பயமாயிருக்கிறது!

புலஸ்தி:—என்ன பயம், என்ன சங்கதி?

உத்பலா:—நான் அதோ அந்த அறையில் ரவிக்கை தைத்துக் கொண்டிருக்கையில், யுவராஜா அவர்கள் சட்டைக்குப் புத்தானில்லாமலும், தலையில் பாகையில்லாமலும், அலங்கோலமாய்த் தலையை விரித்துக்கொண்டும், வெளுத்த முகத்தோடும், கால்கள் ஒன்றோடொன்று இடறிக்கொண்டும், யமலோகத்தைவிட்டு இப்பொழுதுதான் வெளிக்கிளம்பி வந்தவர்போல் அவ்வளவு தீனமான பார்வையோடும் திடீரென்று நுழைந்தார்.

புலஸ்தி:—உன்மேல் வைத்திருக்கும் ஆசையினால் பைத்தியம் பிடித்துவிட்டதா என்ன?

உத்பலா:—எனக்கு ஒன்றும் தெரியவில்லை; அப்படித்தானோ என்னவோ என்று பயப்படுகிறேன்.

புலஸ்தி:—அப்புறம் என்ன செய்தார்?

உத்பலா:—தனது ஒருகையால் என்கையை எலும்பு நொறுங்கும்படி இறுக்கிப்பிடித்துக்கொண்டு என்னை அந்தக்கையளவுதூரம் தள்ளி நிறுத்தி, சூரியனைப் பார்ப்பவர்போல் மற்றொரு கையால் தன் புருவத்தை மறைத்துக்கொண்டு, என் முகத்தை படத்தில் வரைபவர்போல் வெகுநேரம் உற்றுப் பார்த்தார். பிறகு மேலுங் கீழுமாய் மூன்றுதரம் தலையை அசைத்துவிட்டு உடல்வெடித்துப் போவதுபோல் ஒரு பெருமூச்சுவிட்டு என்னைப்பார்த்தபடியே தன்முகத்தைத் திருப்பாமல் உடலைமட்டும் திருப்பிக்கொண்டு வந்தவழியே வெளியே போய்விட்டார்—கண்ணில்லாமல் வழி எப்படித்தான் தெரிந்ததோ அவருக்கு! ஆச்சரியம்! வாசற்படி தாண்டுகிறவரையில் தலையைத் திருப்பிக்கொண்டு என்னைப் பார்த்தபடியே போனார்.

புலஸ்தி:—என்னோடு கூடவா, நாம் ராஜசந்நிதானத்துக்குப் போவோம். காதல்முற்றிப் பைத்தியமாகிறது இப்படித்தான்—இதை இப்படியே விட்டுவிட்டால் இன்னும் அதிகமாகித் தற்கொலை முதலிய தீங்குகளில் முடிந்தாலும் முடியும்—எனக்கு வருத்தமாயிருக்கிறது—நீ சமீபத்தில் ஏதாவது அவரை நிராகரித்துப் பேசினாயோ?

உத்பலா:—தங்கள் உத்திரவுப்படி அவர் எழுதிய கடிதங்களை வாங்கிக் கொள்ளாமல் அப்படியே திருப்பி விட்டேன்—அவர் என்னைப்பார்க்க வேண்டுமென்று வந்தபொழுது சரிப்படாதென்று சொல்லி விட்டேன்.

புலஸ்தி:—அதுதான் அவருக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது! அவருடைய நடத்தையை நன்றாய்க் கவனித்துப்பாராமல் உனக்கு புத்திசொல்லி விட்டதற்காக வருத்தப்படுகிறேன்—அவர் உன்னிடத்தில் யதார்த்தமாய் நடந்து கொள்ளாமல் உனக்கு வீணாசை காண்பிக்கிறார் என்று பயந்தேன்!—சே! என் புத்தியை செருப்பாலடி! இளங்கன்று பயம்

றியாது, என்கிறபடி வாலிபவர்கள் எவ்வளவுக்குகெவ்வளவு ஜாக்கிரதைக் குறைவாய் இருக்கிறார்களோ அவ்வளவுக் கவ்வளவு விருத்தர்கள் மிதமிஞ்சி ஜாக்கிரதையாயிருக்க யத்தனிப்பதனால் காரியத்தைக்கெடுத்து விடுகிறார்கள்!—நல்லது, நாம் ராணு அவர்களிருக்குமிடத்திற்குப்போய் இவ்விஷயத்தை அந்த சந்நிதானத்துக்குத் தெரியப்படுத்த வேண்டும்.—இப்பொழுது கொஞ்சம்சொல்ல சங்கோசப்பட்டால் பின்னிட்டு எல்லோருக்கும் துக்கத்துக்கு ஹேதுவாகும்.

(இருவரும்போய் விடுகிறார்கள்.)

(இன்னும் வரும்.)

---

## THE STORIES OF MAHABHARATA—FOR CHILDREN.

*Specially written for the Vivekachintamani By S. Muthu Iyer, B.A.*

## மஹாபாரத கதைகள்—சிறுவர்களுக்குபயோகமாக எழுதப்பட்டன

(15-ம் புத்தகம் 40-ம் பக்கத்தொடர்ச்சி.)

### ஆரணிய பருவம்.

### 8. பழம் பொருந்துவித்த கதை.

பாண்டவர்கள் தங்கியிருந்த அந்த வனத்தில், அமித்திரன் என்னும் ஒரு முனிவன், வருஷத்துக்கு ஒரு கனி வீதம் பழுக்கும் ஓர் அருமையான நெல்லிக்கனியை அருந்தித் தவம் செய்துகொண்டிருந்தான். அக்கனி அவனுக்கே உரியதாதலின் வேறொருவரும் அதைத் தொடார்கள். ஒருநாள் திரௌபதிதேவி அவ்வனத்தில் சஞ்சரிக்கையில் அந்நெல்லீக்கனியைக் கண்டு அதில் இச்சைகொண்டு அருச்சுனனை நோக்கி, "பிராணநாதனே, இக்கனியை எனக்குப் பரித்துத் தரவேண்டும்" என்ன, அவனும் அதற்கிசைந்து பாணத்தால் அதனை அறுத்து வீழ்த்தினான். அச்சமயத்தில் அங்கு வந்த முனிவர்கள் சிலர் அதைக்கண்டு, "ஆ! ஆ! என்ன அபசாரம்செய்துவிட்டாய்? முனிவன் காணின் குடிகெட்டுப்போமே" யென்று கூற, அருச்சுனனும் பயந்து அக்கனியை அப்படியே கொண்டுவந்து தமையன் முன் வைத்து நடந்த விவரங்களைச் சொன்னான். அப்போது தருமபுத்திரர் நாட்டைவிட்டுக் காட்டில் வந்து வாழ்கையிலும் தங்களுக்குத் துன்பங்கள் விடாமல் ஒன்றின்பின் ஒன்றாய் வந்துகொண்டேயிருத்தல்கண்டு மனம் வருந்தி, இப்போது இதற்கு என்ன உபாயம் என்ன, ஒவ்வொருவரும் அவரவர்க்குத் தோற்றிய யுத்திகளைச் சொன்னார்கள். திரௌபதியோ, "நான் பாவி ஏன் அக்கனியைக் கேட்டேன்? பெண்மதி பேதைமையானது, அதை அறிவுடையோர்கள் கேளார்கள் என்றுலகம் சொல்லும் வார்த்தை நிசமாயிற்றே; வருகிற அனர்த்தமெல்லாம் என்னாலே உண்டாகின்றனவே" யென்று அழுது வருந்தினாள். அப்போது, நகுலன், "பல பல யோசனை செய்தும் அழுது வருந்தியும் பயனில்லை; நமக்கு உயிர்த்துணைவராகிய பகவானைத் தியானித்தலே கருமம்." என்ன, தருமநந்தனரும் அதற்கிசைந்து அவ்வாறே மனமொழி மெய்களை ஒருங்குபடுத்தி அன்போடும் தமது இதயதாமரையில் சதாவீற்றிருக்கும் பெருமானைத் தியானித்தனர். உடனே அவரும் பிரத்யக்ஷமாயினர்.

அவ்வாறெழுந்தருளிய பெருமானை ஐவரும் வணங்கி உபசரித்து நடந்த செய்தியைக் கூறப் பெருமானும் புன்னகைகொண்டு, அவர்களை நோக்கி, நீங்கள் கொடிய அபசாரத்தைச் செய்துவிட்டீர்கள். அம்முனிவன் தன் நியமங்களை முடித்துவருமுன் அற்ற பழம் மறுபடியும் அதன் சினையில் பொருந்துமாயின் பிழைத்தீர்கள்! அல்லாவிடில், அம்முனிவன் கோபத்தை ஆற்றுதல் அரிது. அப்பழம் பொருந்துதற்கு ஓர் உபாயமேயுள்ளது. உற்றதுரைக்கின் அற்றது பொருந்தும்! உங்கள் மனதில் உறுதியாக எப்போதும் கொண்டிருக்கும் உண்மையினை நீங்கள் ஒவ்வொருவரும் உரைப்பீராயின் அற்றுப் போன பழம், பொருந்துதற்கு ஐயமில்லை." என்றனர்.

அப்போது தருமபுத்திரர், "ஐயா, என்னுள்ளத்தில் கிடந்த எண்ணத்தைச் சொல்லுகின்றேன் கேளும். தருமமும், சத்தியமும், பொறுமையும், வளர்ந்து தழைக்கக் கடவன. மேகமேனியனாகிய திருமால் என்றும் வெல்லக்கடவன். பாவமும் பொய்மொழியும் கோபமும் தேய்ந்து அழியக்கடவன. தயித்தியர்குலம் தோற்று நாசமடையக்கடவது. இதுவே நான் அல்லும் பகலும் அனவரதமும் எண்ணிக்கொண்டிருக்கும் எண்ணம்," என்றனர்.

பின்பு, வீமனைக் கேட்க அவன், "பரதாரத்தைப் பெற்றதாயென்றும், பரதிரவியத்தை எட்டிக்காயென்றும், பிறரது நிந்தைமொழிகளை யெடுத்துச்சொல்லுதல் பெருமையன்றென்றும், பிறர் துயரத்தை என் துயரென்றும் என் மனதில் நான் சதா எண்ணிக்கொண்டிருக்கிறேன்," என்றனன். அதன்பின் அருச்சுனன், "ஞானஸ்வரூபராகிய எம்பெருமானே, பிராணனிலும் மானமே மேலானதாதலின் அம்மானத்தைக் காப்பதே யாவர்க்கும் பெருமையும் முறைமையுமாகுமென்பது நான் கொண்டிருக்கும் கொள்கை" யென்றனன். பின்பு நகுலன், "குலத்திலும், அழகிலும், செல்வத்திலும், மற்றைக் குணங்களிலும் சிறந்தோராயினும், கல்வியும், ஞானமும், இல்லாராயின், அவர் மணமில்லாத முருக்கமலர் போல்வார் என்பது என் கொள்கை" யென்றான். பின்பு சகாதேவன், *"குருவினால் உபதேசிக்கப்பட்ட ஒப்பற்ற உபதேசமொழியேதாயும், ஞானமே தந்தையும், தர்மமே சகோதரனும், கருணையே தோழனும், சாந்தமே மனைவியும், பொறுமையே மைந்தனும் என்றும் இவ்வறுவகைச் சுற்றமல்லாமல் வேறு உயிர்க்கு உறவில்லையென்பதும் எனது கொள்கை." என்றனன். பின்பு திரௌபதி, "ஐயா எனக்கு ஐம்புலன்களைப்போல ஐந்துபேர் நாயகர்கள் இருக்கவும் இன்னொருவனையும் கூட நாயகராகப் பெறுதற்கு மனம் உருகும் ஆதலின், உலகில் பெண்களை நம்பக்கூடாதென்பது 'என் கொள்கை.'' யென்றனர்.

இவ்வாறு அறுவரும் உண்மையைச் சொன்னதனாலே, மாயவன் அருளாலே அற்றுவீழ்ந்த அந்த நெல்லிக்கனியானது தன் கொம்பைப் போயடைந்தது. பாண்டவர்களும் முனிவன் கோபத்துக்காளாகாமல் தப்பித்துக் கொண்டார்கள். ஸ்ரீவாசுதேவரும் தமதிருப்பிடமாகிய துவாரகாபுரியை அடைந்தார்.

## 9. நச்சுப்பொய்கைக் கதை.

பின்பு பாண்டவர் அந்த அமித்திரன் வனத்தைவிட்டு விஷ்ணசிந்தனென்னும் ஒரு முனிவன் தவம் செய்துகொண்டிருந்த வனத்தை அடைந்தார்கள். அக்காலத்தில், துரியோதனன் பாண்டவர்களுக்கு வரையறையிட்ட காலம் கழிந்து போதலினால், அவர்கள் மீண்டும் நாட்டுக்கு வந்து தங்கட்குரிய பாகத்தைக் கேட்பார்களே யென்னும் பயத்தால் அவர்களை எப்படியாவது கொன்றுவிடவேண்டுமென்று, அதற்காகச் சகுனி, கருணன் முதலான துர்மந்திரிகளோடு ஆலோசித்தான். அவ்வாறு ஆலோசித்துக் காளமாமுனி யென்னும் ஒரு முனிவனை வரவழைத்துப் பாண்டவர்களைக் கொல்லும் பொருட்டு தீயோர் அபிசாரவோமம் செய்ய வேண்டுமென்ன முனிவரன் அதுகேட்டுக், "கொடிது! கொடிது! என்ன காரியம் உத்தேசித்தீர்கள்! பாண்டவர்களைக் கொல்லுதல் பாவமென்பது கிடக்கட்டும். அவர்களுக்கு ஸ்ரீ கண்ணபிரான் அருளுள்ளவரையில் யாதோர் கெடுதியுண்டாமோ? இதனால் உமக்கும் எனக்கும் நாசமுண்டாதலன்றி நன்மை யுண்டாதல் இல்லை" யென்றான். அவன் யாது சொல்லியும் கேளாமல் அவர்கள் அவனுக்கு அநேக நல்ல வார்த்தைகளைச் சொல்லி உடன்படுத்தி ஓமத்துக்கு வேண்டிய பொருள்களையெல்லாம் உதவினார்கள். அவனும் அவ்வாறே கொடியதோர் வேள்வியைச் செய்ய, அவ்வேள்வித் தீயினின்றும் உலகமெல்லாம் விழுங்கவல்ல ஒரு பூதம் தோன்றிற்று. அவன் அதனைப் பழிக்கஞ்சாது பாண்டவர்களைச் சென்று கொன்றுவருக என்று விடுத்தான்.

இதற்குள்ளாக, இவர்களை இரக்ஷிக்கக் கருதி யமதர்மராஜா தானோர் மான்போல்

* அவன் வாய்ப்பிறப்பு இது :—
"ஸத்யம் மாதா பிதாஞானம் தர்மோப்ராதா தயாஸகா
சாந்தி: பத்நீ க்ஷமாபுத்ர: ஷடைதே மமபாந்தவா:||

வேடம்பூண்டு அவ்வனத்தில் வந்து அங்கு ஒரு முனிமகன் மார்பில் பூண்டிருந்த கிருஷ்ணஜிநத்தை வெடுக்கென்று பறித்துக்கொண்டு போயினன். அதுகண்டு பாண்டவர்கள் அந்த மான்தோலைத் திரும்பவும் பெறும் பொருட்டு அம்மானைப் பின்தொடர, அம்மான், முன் இராமபிரானை மயக்கிய மாரீசனென்னும் மாயமானைப்போல அநேக ஜாலங்கள் செய்து அவர் கையிலகப்படாமல் அவர்களை நெடுந்தூரம் அலையச்செய்து அவர்களுக்கு அளவற்ற தளர்ச்சியும் தாகமும் உண்டுபண்ணிற்று. அதனால், அவர்கள் அம்மானைப் பிடித்தல் அசாத்தியம் என்று அம்முயற்சியைவிட்டுத் தளர்ச்சி நீங்கும்படி ஓரிடத்தில் தங்கினார்கள். அப்போது, தருமபுத்திரர் சகாதேவனை நோக்கித் "தம்பீ தாகத்தால் உயிர் துடிக்கின்றது. நீ சென்று எங்கிருந்தாவது உண்ணீர் கொண்டுவருக," என்று விடுத்தனர். அவனும் நெடுந்தூரம் சென்று அங்கோர் பொய்கையைக்கண்டு களித்து அம்மடுவில் சென்று முதலில் தான் தாகசமனம் செய்துகொள்ள ஒரு முறடு நீரெடுத்துப் பருகுதலும், உடனே கிறு கிறு வென்று கீழே விழுந்து ஆவியை இழந்தான். அவன் வாராமையாலே, பின்பு நகுலனை அனுப்ப, அவனும் அப்பொய்கைக்கே வந்து தம்பியைப்போலத் தானும் உயிர் நீத்தனன். பின்பு அருச்சுனனும், அதன்பின் வீமனும், வந்து தாகத்தின் கொடுமையால் தம்பியர்கள் இறந்ததையும் எண்ணாமல் அந்த விஷநீரை உண்டு உயிர் இழந்தார்கள்.

இவர்கள் இப்படி உயிர்மாண்டு கிடக்கையில் முனிவரன்விட்ட பூதமானது அவர்களைத் தேடிக்கொண்டு சென்று முதலில் தருமபுத்திரர் ஓர் சந்தன மரத்தடியில் தாகத்தால் சோர்ந்து மெய்மறந்து கிடப்பதைக் கண்டது. கண்டதும், அவர் வெயிலின் கொடுமையால் உயிரிழந்தனரென்று கருதி, அவரைவிட்டு அப்பாற்சென்று, அந்தப்பொய்கைக்கரையில் இறந்து கிடக்கும் நால்வரையும் கண்டு பரிதபித்து, ஐயோ! இவர்களும் இந்த விஷநீரையுண்டு உயிரிழந்தார்போலும்! என்று எண்ணித் தன்னை அனுப்பின முனிவரனிடத்தில் மீண்டுவந்து அவனைப் பார்த்து, "ஓ புத்தியில்லாதவனே, பாண்டவர்கள் இதற்கு முன்னமே விதிவசத்தால் இறந்துகிடக்க அவர்களைக் கொல்லும்படியாய் என்னை நீ ஏவியது விசித்திரம். எனக்கு நீயே இலக்காக நின்றாயாதலின், உன்னையே கொல்கின்றேன்," என்று அம்முனியை ஓரே அறையாய் அறைந்து கொன்றுவிட்டுத் தானும் அவ்வேள்வித்தீயில் புகுந்து மறைந்தது. "தன்வினை தன்னைச்சுடும்" என்றபடி முனிவன் எழுப்பின பூதமே அவனுயிரை உண்டது.

இங்கு சந்தன மரத்தடியில் மூர்ச்சித்துக் கிடந்த தருமபுத்திரர் மூர்ச்சை தெளிந்து எழுந்து, தம்பிமார்களின் நினைவுவர, உடனே அவர்களைத் தேடிக்கொண்டுபோய் அந்நச்சுப் பொய்கைக்குத் தாமும்வந்து சேர்ந்தார். அங்கு வீமன் முதலான நால்வரும் இறந்து கிடத்தலைக்கண்டு பெருந்துயர்கொண்டு, பின்பு, விதியின் பயனென்றுணர்ந்து உயிரினும் சிறந்த அவர்கள் இறந்தபின் தமக்கு வாழ்வென்ன என்று தாமும் அந்நச்சுநீரை உண்டு சாகத்துணிந்தார். அப்போது யமதர்மராஜா அசரீரியாய் நின்று அவரை நோக்கி, "நீ இந்நீரை உண்ணாதே நான் கேட்கும் வினாக்களுக்குச் சரியான விடையளிப்பாயாயின் உன் தம்பிமார்கள் நால்வரும் பிழைத்தெழுவார்கள்;" என்று கூறலும் அவ்வாறே ஆகுகவென்று தருமபுத்திரர் அதற்கு நேர்ந்தனர். அக்கேள்விகளும் விடைகளும் பின்வருமாறு:—

வினா:—நூல்களிற் பெரியது எது?

விடை:—வேதம்.

வினா:—இல்லறத்துக்குரியது எது?

விடை:—நற்குண நற்செய்கையுள்ள அநுகூலியான மனையாள்.

வினா:—மலர் மாலைகளில் வாசனை மிக்கதெது?

விடை:—சாதிமலர் மாலை.

வினா:—நல்ல மாதவம் யாது?

விடை:—குலவொழுக்கத்தை விடாமையே.

வினா:—முனிவர்கள் பூஜிக்கும் கடவுள் யார்?

விடை:—முகுந்தனே.

வினா:—பெண்களுக்கியற்கையான துயாது?

விடை :—நாணம்.

வினா :—தனமிருந்தவர்களுக்குக் காவலாயிருப்பது யாது ?

விடை :—பாத்திரமறிந்து செய்யும் தானமே.

வினா :—செவிக்கின்மையானதெது ?

விடை :—இளங்குழந்தைகளின் மழலைச் சொல்லே

வினா :—அழியாது நிலை நிற்பதெது.?

விடை :—மேலான கீர்த்தியே.

வினா :—கற்றற்குரிய கல்வியாவது எது.?

விடை :—அஞ்ஞானம் நீங்கித்தெள்ளறிவுண்டாகக் கற்பதே கல்வி.

வினா :—எல்லாவற்றிலும் அற்பமாவது யாது?

விடை :—பிறரிடத்திற்சென்று யாசித்தலே.

இவ்வாறு, கேட்ட கேள்விகளுக்கெல்லாம் தக்க உத்தரம் அளிக்க, எமதர்மராஜா சந்தோஷித்து அவருக்குப் பிரத்யக்ஷமானார். தர்மபுத்திரர் அவரைக்கண்டு வணங்கி நிற்றலும் அவர் ஒரு மந்திரத்தை உபதேசித்து இதைச்சொல்லி தம்பிகள் நால்வரில் உனக்கிஷ்டமானவனை அழையென்று கூறலும், அவர் நகுலனை அழைத்தனர். அவனும் துயிலுணர்ந்தவன்போல எழுந்து நின்றனன். அப்போது தர்மராஜா, தர்மபுத்ரரைநோக்கி நீ வீமன் அருச்சுனன் இருவரையும்விட்டு நகுலனை அழைக்க வேண்டிய காரணமென்னென்னலும், குந்திக்குயானொருபுத்திரனிருக்கின்றேன். அதுபோல மாத்திரைக்கும் ஒருமகன் வேண்டுமாதலால் அப்படிச் செய்தேனென இயமன் களிகூர்ந்து மற்றத் தம்பிமார்களையும் எழுப்பிக்கொடுத்து துரியோதனன் செய்த வஞ்சனையைச்சொல்லி வேண்டிய வரங்களையும் கொடுத்துப்போயினன்.

---

இக்கதையில் அநேகவிஷயங்கள் நமக்குப் புலப்படவில்லை. ஒன்று, பாண்டவர்களுக்கு இடையூறு வரும்போதெல்லாம் பகவான் ஸ்ரீகண்ணபிரான் அவ்விடையூறுகளை நீக்கி அவர்களைக் காப்பது வழக்கமாயிருப்ப இங்கு தர்மராஜன் அத்தொழிலை மேற்கொண்டு செய்யக்காரணம்யாதோ? காளமாமுனிவன்கூடக் கண்ணபிரான் கிருபை இவர்களுக்குப் பரிபூரணமாயிருக்க என்னால் செய்யும் இடையூறு எவ்வாறு பலிக்கும் என்று பயந்தானே ஒழிய மற்றவர்கள் வந்து விலக்குவார்களென்று எண்ணவில்லை.

இரண்டு, இயமனுக்குக் கொலைத்தொழில் உரிமையாயிருப்ப இங்குகாவல்தொழிலைமேற்கொண்டது அவனியற்கைக்குச் சிறிது மாறுபாடாயுள்ளது. ஆயினும் அவன் செய்தது அவ்வளவு சிலாகிக்கத்தக்கதாகவும் தோற்றவில்லை. வருவற் சட்டியிற்றப்பி எரிகிற நெருப்பில் விழுந்தாற்போலப் பாண்டவர்கள் ஒருவிதமான மரணத்தில் தப்பி இன்னொருவிதமான மரணத்தையே அடைந்தார்கள். பூதத்தால் கொலையுண்ணமல் விஷநீரால் உயிர்மாண்டார்கள். தருமபுத்திரர்கூடக்களைப்பினாலும் தாகத்தாலும் பிராணன் போனதுபோலவே மூர்ச்சையடைந்தார். கொல்லினும் பின்பு உயிரைக்கொடுத்தது கூற்றனுக்கு ஆற்றவும் சிறப்பே. ஆயினும் இக்கதையால் நாம் தெரிந்துகொள்வத்தக்க சில உண்மைகள் உள்ளன. புண்யவான்களும் நிரபராதிகளும், சாத்விகர்களுமாயிருப்பவர்களுக்குப் பாவிகளும் துஷ்டர்களும் செய்யும் துரோகச்செய்கைகள் பலிக்கமாட்டாவென்றும், அப்புண்யவான்களுக்கு அறக்கடவுள் துணை நிற்குமென்றும் புலப்படும். காளமாமுனிவன் கதையினால் பிறருக்குத்தீங்குசெய்பவர் தமக்கே தீங்கைத் தேடிக்கொள்கிறார்களென்பதும், பிறர்க்குக் கெடுதியைச்செய்பவன்தானே கேட்டை அடைவானென்பதும் புலப்படும். காளமாமுனி செய்தகாரியம் மிகவும் கொடுமையானது. துரியோதனாதியர் பனையால் பாண்டவர்க்குக்கேடுசூழ்ந்தார்கள். இவனுக்குப் பாண்டவர்கள் ஒருவிதமான தீங்கும் செய்தவரல்லர்! கேவலம் பொருளாசையினாலேயே அக்கொடியமுனிவன் அக்குரூரமான காரியத்தை மேற்கொண்டான். ஆகலின் அவன் அத்தீயகாரியத்தின் பயனை உடனே அடைந்தான்.

ஆரணிய பருவம் முற்றிற்று.

எஸ். முத்துஐயர், பி. ஏ.

[குறிப்பு—இங்கே, நம் விவேகசிந்தாமணியை வாசிக்கும் சிறுவர்களுக்காக மஹாபாரத கதைகளை எளிய நடையில் தெளியச் சொல்லிவர மனமுவந்த நமது நண்பர், சில சந்தேகங்களைக் கிளப்பி அவற்றைத் தீர்க்காமலே விட்டுவிடலாயினர். இக்கதைகளை வாசிக்கும் சிறுவர்கள் இச்சந்தேகங்களை மனதிற்கொண்டு மஹாபாரதம் என்பது வெறும் கட்டுக்கதையென்று நினைத்துவிடுவார்கள். உண்மையப்படியல்லவாதலால், அவர்கள் இளமனத்தைக் கலக்கத்தக்க சந்தேகங்களுக்கு ஒருவிதத்தில் விடைபகர்வது நம் கடமையென்று எண்ணி, நமக்குத் தோற்றுவதை வெளியிடத் துணிந்தோம். இதை வாசிப்போர் எதையும் சிந்தித்து ஆராய்ந்து உண்மையுணர்ந்துய்யக்கடவர்கள். இராமாயணம், மஹாபாரதம் இரண்டும் இதிஹாஸங்கள். அதாவது பரதத்துவங்களை விளக்குவதற்கான உதாரண ரூப கிரந்தங்கள். இதைச் செய்தவர்கள் ஸ்வானுபவச் செல்வர்களான மஹரிஷிகள். அவர்கள் ஆதியோடந்தமாய் தத்துவங்களையெல்லாம் ஸ்வானுபவரீதியாகத் திருப்பித் திருப்பியாராய்ந்து அனுபவத்திலுணர்ந்து என்றுமழியாது காரணமாத்திரமாயும் பிரகாச ரூபமாயுமுள்ள பரதத்துவங்கள் காரியமாகவும் விமர்சை ரூபமாகவும் பிரவர்த்திக்குங்கால், அவைகளின் காரணத்தை யொட்டியே யொழுகும் சூக்ஷ்மாதிசூக்ஷ்மமான விதியை யுணர்த்துவது மிகவும் கஷ்டம். ஆயினும் இவ்விதிஹாஸங்களை லோகோபகாரமாகஇயற்றிய மஹரிஷிகள் இவ்வதிநுட்பமான விதிவிலக்குகளை வெகு அழகாகவும் மயிரிழை பிசகாமலும் போதித்திருப்பது மிகவும் வியக்கத்தக்கது. பராசக்திக்கு "அவ்யாஜகருணாமூர்த்தி" யென்று ஒரு பெயர். இதனால் அச்சக்தியவதாரமாகி கருணையங்கடலாகிய கண்ணபிரான் பாண்டவர்களுக்கு இதம்புரிந்தாலும், அவர் பக்ஷபாதத்தால் செய்தவரல்லர். விதிவிலக்கு எல்லாருக்கும் ஒன்றே. விவேகிகள் அவைகளையறிந்து நல்வழி பற்றுவார்கள். அவிவேகிகள் அஹப்பற்று நீங்காமையால் கோணல் வழியில் சென்று அவதிப்பட்டு ஆபத்துகளையெல்லாமனுபவித்து நல்வழி திரும்புவார்கள். காளமாமுனி அஹப்பற்று நீங்காத தபோதனன். ஐம்புலன்களையடக்கித் தபசிருந்தால், தபசிற்குத் தக்க பலன் அததற்குரிய அதிஷ்டான தேவதைகள் கொடுத்தே தீரவேண்டும். காளமாமுனி தன்னுடைய தபோமகிமையால் பூத தத்துவங்களை வசப்படுத்தக் கற்றவர். சூன்யவித்தைகற்றவன் அதை உபயோகிக்காமலிரான். சூன்யக்காரன் பூதத்தை ஏவினால் அந்த ஏவலைத் தடுக்கமுடியாது. ஆனால் புத்தி சாமார்த்தியத்தினால் அவன் ஏவின ஜடசக்தி அவனையே பிடிக்கும்படிச் செய்யலாம். தர்மராஜாவின் தொழில்கொலைத்தொழில் என்பது தப்பெண்ணம். தர்மம் தலைகவிழாது காப்பதே அவர் தொழில். அவரவர்களுடைய கர்மம் அவர்களைக் கொல்கிறதேயன்றி தர்மராஜா கொல்வதில்லை. வருமுன்காப்போன், வந்தபின்காப்போன், வருங்கால்காப்போன்,"என்னும் மீன்களின் கதையை வாசித்தறிந்திருக்கும் சிறுவர்களும் உபாயத்தால் வருமுன் காப்போனைப்போல் ஆபத்தை வெல்லலாம் என்று தெரிந்து கொள்வார்கள். தர்மராஜா, கால நியமாதிபதியானாலும், தர்மபுத்திரன் தன் பிள்ளையானாலும், தனது தீர்க்க திருஷ்டியாலறிந்த அவர்களுக்கு வருமாபத்து ஒன்று அவர்களையணுகாதபடி காப்பது அவருக்கு இயல்பும் தர்மமுமேயாகும். எல்லாவற்றிற்கும் ஸர்வ சாக்ஷியாயுள்ள கண்ணபிரான். அவர்கள் பிரார்த்தனையின்றி இதிற் புக நிமித்தமில்லையே. தர்மராஜனே தன் கடமைபற்றியும் உரிமைபற்றியும் அவர்களைக் காக்கவேண்டியவனாகிறான். ஆகையால் அவன் தன் கடமையை நிறைவேற்றினதில் அதிசயமொன்றுமில்லை. நிறைவேற்றினவழியும் சரியே. ஆனால் அதைப்பற்றி விவரிக்கில் சிறுவர் மனதிற்கு ஏறாத தத்துவங்களைப்பற்றிப் பேசவரும். ஆகையால் அதுவும் சரியென்று சொல்வதோடு நிறுத்தவேண்டியதாயிருக்கிறது. ஆனாலும் ஒரு திர்ஷ்டாந்தத்தால் விளக்கிக்காட்டப்பார்ப்போம்.

"ஒருநண்பன் வீட்டில் தீவட்டிக்கொள்ளையடிக்க ஏற்பாடு செய்திருக்கிறதாக புத்திசாலியும் மஹாயுக்திமானுமாகிய ஒருவனுக்குத் தெரிந்தது. அவன் அதைப்பற்றி அவனுடைய நண்பனிடமாவது போலீஸாரிடமாவது தெரிவிக்காமல், அந்த தூர்த்தர்களையடக்க அது காலமல்லவென்றுணர்ந்து, தன் நண்பனை தன் வீட்டில் ஒரு விவாகத்துக்கு அழைக்கிற வியாஜத்தைவைத்து ஆடையாபரணாலங்கிருதர்களாக அவன் வீட்டிலுள்ள எல்லாரையுமழைத்துப்போய் வீண் ஆர்ப்பாடங்கள் செய்து கடைசியில் கொள்ளைசங்கதியவனுக்குத் தெரிந்து அதனால் அவன் சித்தப்பிரமை கொண்டுபோவான்போலிருக்கிற சமயத்தை முன்னிட்டு, தான் வைத்தியத்தில் தேர்ந்தவனாதலால், நேர்வாளமாத்திரையில் இரண்டிழைப்பு இழுத்து அவன் களைத்து மூர்ச்சித்துப்போகும்படி பேதியாகச்செய்து அவனைத் தன் வீட்டிலிருத்திக்கொண்டான். பிறகு களைதெளிந்தபின் அவனுக்கு வேண்டிய உபசாந்திகளைச்செய்து சரிப்படுத்தியனுப்பினான். தீவட்டிக் கொள்ளைக்காரனும் ஆடம்பரமாய்வந்து பார்த்து வீட்டில் ஆளும் இல்லாமல் ஆடையாபரணாதிகளுமில்லாமலிருக்கக்கண்டு தனக்கு உளவுகண்டு சொன்ன களவு நேசனைப்பிடித்து காட்டில் கிட்டவிருந்த ஒரு மரத்தின் கிளையில் தூக்கிட்டுத் தண்டிக்கச்சொன்னான்." முன்சாக்கிரதையாயிருந்த வைத்தியன் தன் நண்பன் உயிரையும் சொத்தையும் காப்பாற்றவேண்டி முக்கியமானவைகள் போக மற்றவைகளையெப்படி தீவட்டிக்கொள்ளைக்காரனுக்குக் காட்டிக்கொடுத்து அவன் கோபம் உளவுசொன்ன களவாணியிடம் பற்றச்செய்தானோ அப்படியே தருமவைத்தியனான தர்மராஜாவும் செய்தார். இதில் குற்றமென்ன குறையென்ன? விபரீதம்தானென்ன! உற்றுநோக்கி உன்னும்படி யாராயின்எல்லாம் சரியாகப்படும். அப்படியே தான்இந்தக்கதையிலும். காளமாமுனி கிளப்பிவிட்ட பூதம் தீவட்டிக்கொள்ளைக்காரன். காளமாமுனி உளவுசொன்ன களவாணி. யமதர்மராஜா தருமவைத்தியன்.—வி. சி. பா.]

# SITA—A TALE OF HINDU DOMESTIC LIFE.

## சீதா அல்லது இல்லற வாழ்க்கை.

### 10–வது அதிகாரம்.

சேஷய்யர் தன் கிராமத்துக்குப்போனதும் வெங்கட்ராம சாஸ்திரிகள் அவரை அத்துடன்விட மனமில்லாமல், மறுபடியும் அவரிடம்போய் தன்னுடைய கலகக்காரியத்தை ஆரம்பித்தார். சேஷய்யருடைய மனதைக்கலைத்து காமேசுவரய்யருடன் அவரிருப்பது கூடாதென்றும் தனியாக ஒரு பங்களா தன் கிராமத்தில் கட்டிக்கொண்டு அங்கே சம்சார சகிதமாக காமேசுவரய்யருடைய அலட்டு இல்லாமல் சுகமாககுடியிருக்கும்படி உபதேசம்செய்தார். சேஷய்யருக்கு வெங்கட்ராமசாஸ்திரிகள் காமேசுவரய்யரைப்பற்றிச் சொன்ன தூஷணைகள் காதுக்கு ஏற ஏற காமேசுவரய்யர்மீது இவருக்கு வெறுப்பு அதிகமாயிற்று. இப்படி 6-மாதம்செல்லக் கடைசியில் தன்கிராமமாகிய பந்தலூரில் ஓர் பெரியபங்களாகட்டுவதாக சேஷய்யர் தீர்மானித்தார். வெங்கட்ராமசாஸ்திரிகள் இதை தன்னுடைய கலகக்காரியத்திற்கு அஸ்திபாரமாய் வைத்துக்கொண்டார். சேஷய்யர் பங்களாகட்ட காமேசுவரய்யர் சம்மதிக்கமாட்டாரென்று அவருக்கு நிச்சயமாய்த் தெரியும். அதனால் ஓர்பெரிய கலகம்வரும்! பிறகு பாகத்திற்கு ஏற்பாடுசெய்யலாமென்று வெங்கட்ராமசாஸ்திரிகள் தீர்மானித்து வைத்திருந்தார். இவர் உத்தேசப்படியே அதுமுடிந்தது. காமேசுவரய்யரிடம்சேஷய்யர் பங்களா பிரஸ்தாபமெடுக்கும்போதே அவர் எழுந்திருந்து இவர்சொல்வதை கவனியாமல் வெளியேபோய்விட்டார். சேஷய்யருக்கு வந்தகோபத்தை அளவிடக்கூடவில்லை. வெங்கட்ராமசாஸ்திரிகளும் இதுதான் சமயமென்றுகண்டு அந்தகோபத்தை இன்னும் அதிகப்படுத்தினார். பிறகுமறுபடியும் ஒருநாள் சேஷய்யர் காமேசுவரய்யரிடம் நல்லவார்த்தைகள் சொல்லிப்பிறகு சமயம்பார்த்து பங்களா சமாசாரத்தை சொன்னார். காமேசுவரய்யர் பணம் ஏதென்றார். சேஷய்யர் 10,000ரூபாய் கடன் வாங்கவேண்டியதுதானென்றார். காமேசுவரய்யர் கலியாணத்தின்போதும் ஏராளமாய் கடன் வாங்கியாகிவிட்டது. இப்போதும் கடன்வாங்கி மகாதேவன்பிள்ளை தலையில் சாம்பலைஅடித்துப் போடச்சொல்லுகிறதா என்றார். சேஷய்யருக்கு இதைக்கேழ்க்க வெகு கோபம்வந்துவிட்டது. அந்த ஊர்போக்கிரி கிருஷ்ணசாமி அய்யன் எங்கேசமயம் அகப்படப்போகிறதென்றுபார்த்துக் கொண்டிருந்தான். காமேசுவரய்யர் எங்கேயாவது ராஜியாய்விடப்போகிறாரென்று பயந்து மெள்ள காமேசுவரய்யர் பக்ஷம் சேர்ந்துகொண்டான். காமேசுவரய்யர் கபடமற்றவரென்று நாம் முன்னமேயே சொல்லியிருக்கிறோம். தனக்குத்தெரியாமல் வெங்கட்ராமசாஸ்திரிகளும் நாராயணசாஸ்திரிகளும் சேஷய்யர் மனதைக்கலைத்திருப்பது இவருக்குத்தெரியாது. கிருஷ்ணசாமி அய்யன் தன்னுடன் சேர்ந்திருப்பதற்குக் காரணமும் இவருக்குத் தெரியாது: கிருஷ்ணசாமி அய்யன் காமேசுவரய்யரைப் பார்த்து என்ன அண்ணா இந்தக்காலத்தில் அண்ணா சொல்லைத்தம்பி கேழ்க்கிறதென்கிற வழக்கமேபோய்விட்டது. இனி தம்பிசொல்லைத்தான் அண்ணா கேழ்க்கவேண்டும்போலிருக்கிறது. அப்படி நியாயமிருந்தாலும் கேழ்க்கலாம். கலியாணத்திற்கே எவ்வளவோ செலவாகிவிட்டது. எல்லாம் இவனாலே தானே ஆச்சுது. உங்களுக்கு என்னசெலவு! மகாதேவன்பிள்ளைக்காகத்தான் என்னசெலவு! எல்லாம்சமலாவடியான் தானே கொட்டிக்கொண்டுபோய்ச் சேர்ந்தான். இதுபோதாதென்று பங்களாவேறேயா. என் இருக்கிற வீடுபோதலேயாக்கும்! பங்களாவேறே கட்டிக்கொண்டு சுகப்படவேண்டுமாக்கும். எல்லாம் நீங்கள் கொடுக்கிறஇடந்தானண்ணா. அவர் என்னசெய்வார்! அவர் பேரில் பிசகில்லை. கலியாணத்தின்போது எழுதிக்கொடுத்த பாண்டின் பணம் உங்களுக்குத் தெரியாமல் கொடுக்கப்பட்டிருப்பது ஒன்றுபோதாதா அவன் உங்களைலக்ஷியம் செய்கிறதில்லையென்பதற்கு! காமேசுவரய்யர், அதையும் கொடுத்துவிட்டானா எனக்குத்தெரியாதே என்றார். கிருஷ்ணசாமி அய்யன் ஏனண்ணா நீங்கள் அவனுக்கு லக்ஷியமாயிருந்தால்தானே அவன் உங்களிடம் சொல்வான் என்று சொல்லி பலவிதமாய் காமேசுவரய்யர் மனதைக்கலைத்துவிட்டான். வெங்கடராமசாஸ்திரிகளும் சேஷய்யர் கக்ஷியில் சும்மா இருக்கவில்லை. அவரும் இதுபோலவேசேஷய்யரைத்தூண்டிவிட்டார். நம்பசேஷண்ணாவுக்கு வீட்டில் என்ன அதிகாரமிருக்கிறது. எல்லாவற்றிற்கும் காமேசுவரய்யரைத்தான் கேழ்க்கவேண்டும். சேஷண்ணா இனி சாப்பிடுவதென்றால் கூட காமேசுவரய்யரை உத்திரவு கேழ்க்கவேண்டியதுதான். நானும்வீடுகள் பார்த்திருக்கிறேன், இப்படிபார்த்ததே இல்லை. அதோ அன்றைக்கு சுப்பய்யர்வீட்டில் சுப்பய்யர் தம்பி கோபாலய்யர் பெண்சாதி புருஷனை ஒரு காசுமாலை பண்ணிப்போடவேணுமென்றாள். மறுநாள் காலமே எழுந்திருந்ததும் தட்டானை தருவித்து உடனேசெய்து போட்டுவிட்டார். சுப்பய்யர் பேசாமல் பணத்தைக்கொடுத்துவிட்டார். இல்லாவிட்டால் தம்பி மிரட்டுகிறான். நம்ப சேஷண்ணாவா பிள்ளைப்பூச்சி! எங்கே! காமேசுவரய்யரைக் கேளாமல் ஒரு திருகு, சொரை பண்ணிவிடச்சொல்லு நான் என்குடுமியை அறுத்துக் கொள்கிறேன் என்றார். சேஷய்யருக்கும் இதுகளையெல்லாம் கேழ்க்கக்கேழ்க்க, தன்னை காமேசுவரய்யருக்கு அடிமைபோல நினைத்துக்கொண்டு இனி அப்படி இருக்கக் கூடாதென்று தீர்மானஞ் செய்துகொண்டார். இப்படி சகோதிரர்கள் இருவருக்கும் ரோசம் அதிகமாகவே கலகம் அதிகமாகிவிட்டது. சேஷய்யர் பங்களா கட்டித்தான் தீரவேண்டுமென்றார். காமேசுவரய்யர் கட்டினால் உன் செலவில்தான் கட்டவேண்டுமென்றார். இப்படி இருவருக்கும் கலகம் அதிகரிக்க வார்த்தைகள் வித்யாசமாக மாறி

கடைசியில் காமேசுவரய்யர் நீ இப்படியிருந்தால் எனக்கும் உனக்கும் சரியாகவராது. நீ தனியாக இருக்கவேண்டியது தானென்றார். கடைசியில் வெங்கட்ராம சாஸ்திரிகள் மத்யஸ்தர்போல் வந்து என்ன காமேசுவர அண்ணா இந்த சிறுபயலுக்காக இவ்வளவு வார்த்தை நீங்கள் கேழ்க்கிறதா. காலுக்காகாத செருப்பை கழட்டிஎறி யென்று சொல்லுயிருக்கிறதல்லவா. கழட்டி எறிந்து விடுங்களென்றார். காமேசுவரய்யரும் அப்படியே சம்மதிக்க சேஷய்யருக்கும் காமேசுவரய்யருக்கும் பாகம்செய்து வைத்துவிடுகிறதென்று தீர்மானிக்கப்பட்டது. சேஷய்யர் உடனே இந்த தீர்மானத்தை சம்பந்தி நாராயணசாஸ்திரிகளுக்கு தந்திமூலமாய் தெரிவித்தார். நாராயணசாஸ்திரிகள் வீட்டில் இந்த சமாச்சாரம் கிடைத்தவுடனே அதற்காக ஓர்விருந்து நடந்தது. அந்த தந்தி பூஜையில்வைத்து பூஜை செய்யப்பட்டது. பிறகு நாராயணசாஸ்திரிகளும் சேஷய்யருக்கு ஒத்தாசை செய்ய தந்தியைப்பார்க்க வெகுவேகமாய் போகவேண்டுமென்று புறப்பட்டார். ஆனால் அப்படி போக முடியவில்லை. நாராயணசாஸ்திரிகள் வந்ததும் வெங்கட்ராமசாஸ்திரிகளோடு முன்னாடி கலந்துகொண்டார். பிறகு சேஷய்யருக்காக நாராயணசாஸ்திரிகளும், காமேசுவரய்யருக்காக கிருஷ்ணசாமி அய்யனும் வெங்கட்ராமசாஸ்திரிகள் பொதுமனிதன் போல வேஷம் போட்டபடியால் பொது மனிதனாகவும் கணக்குப்பார்க்க உட்கார்ந்தார்கள். கணக்குப்பார்க்கும்போது வீடுகட்டின செலவுவந்தவுடனேசேஷய்யர் அதை நான் ஒத்துக்கொள்ளமாட்டேன் அண்ணாதான் வீம்பாய் வீடு கட்டவேண்டுமென்று கடன் வாங்கிக் கட்டினது அந்த செலவை அண்ணாதான் பொறுத்துக்கொள்ள வேண்டுமென்றார். காமேசுவரய்யர் உண்மையாய் ஒருவருக்கும் நான் வீடுகட்டி கலியாணம் செய்யவில்லை. அந்தச்செலவு என்னைச் சேர்ந்ததல்ல வென்றார். பிறகு கலியாணச்செலவுகள் வந்தவுடனே காமேசுவரய்யர் அந்தசெலவுகளை சேஷன் தான் பொறுத்துக் கொள்ளவேண்டும்! அவன்பெண்ணின் கலியாணச்செலவு தானேஎன்றார். சேஷய்யர், குடும்பம் பொதுக்குடும்பமாயிருக்கும் போது எல்லாம் பொதுக்கணக்கில் போட்டுக்கொள்ளவேண்டியது தானே என்றார். காமேசுவரய்யர் அந்த மாதிரி வீட்டிற்கு சொல்லக்கூடாதோ என்றார். சேஷய்யர் வீடு நான்வேண்டாமென்றபோதே கட்டப்பட்டதுஎன்றார். காமேசுவரய்யர் கலியாணச் செலவும் அவ்வளவு செலவுசெய்ய எனக்கு சம்மதமில்லாதபோது செய்யப்பட்டது என்றார். சேஷய்யர் செலவுசெய்து எனக்கென்ன பிரயோஜனம். மச்சுனனுக்கு 200-ரூபாயும் இப்படி வேண்டியவர்களுக்கெல்லாம் ரகசியமாகக் கொடுத்தால் அதுகளெல்லாம்கூட கலியாணச்செலவா! 10,000-ரூ செலவு, 15,000-ரூபாய் செலவாகிறதென்றால் விளையாட்டா என்றார். இதைக்கேழ்க்க காமேசுவரய்யருக்கு கோபம் வந்துவிட்டது. இந்தவார்த்தை வந்தபிறகு வீட்டு விஷயமானகடன், கலியாண விஷயமானகடன் இதுகளை நான் ஒருபோதும் ஒத்துக்கொள்ள மாட்டேன். அது சேஷன் கணக்கில்தான் போடவேண்டுமென்றார். சேஷய்யருக்கு அதைப்பார்க்க கோபம் வந்துகிடக்கிறது. "இந்தபாகம் வேண்டாம் நான் வாங்குகிறவிதமாகவாங்குகிறேன்." என்று போய்விட்டார். பிறகு சகோதிரர்கள் இருவருக்கும் மனஸ்தாபம் நடுவிலிருப்பவர்களால் அதிகரிக்கப்பட்டது. வெங்கடராம சாஸ்திரிகள் சேஷய்யரிடம் தனியாக, கோர்டில் போனால் கடனெல்லாம் மானேஜ்பண்ணினவாளைத்தானே பிடிக்கும் பார்ப்போமே என்றுசொல்லி அவரைத் தூண்டிவிட்டார். கிருஷ்ணசாமி அய்யனும் இதுதான் நமக்கு தருந்த சமயமென்றுகண்டு, கோர்ட்டுக்குப்போய் இவன் கழட்டுகிறது இருக்கட்டுமென்னை இவன் பெண்ணின கலியாணச்செலவை இவன்தானே போட்டுக்கொள்ள வேண்டும். கோர்ட்டில் இதுகூட இல்லையென்று ஆகிவிடுமா பார்ப்போமே என்றான். கடைசியில் சேஷய்யர் பாகவியாஜ்யம் போடுகிறதென்று தீர்மானித்து வக்கீல் கிருஷ்ணசாமி அய்யரைப்போய் பார்த்தார். கிருஷ்ணசாமி அய்யர் காமேசுவரய்யர் தனக்கு வேண்டியவரென்றும் அவர்கக்ஷி தன்னிடம் தான் வருமென்றும் ஆகையால் வேறு ஒரு வக்கீலுக்கு கடிதம் எழுதிக் கொடுப்பதாகவும் சொல்லி ஓர் கடிதம் எழுதிக்கொடுத்தார். சேஷய்யர் அக்கடிதத்தை வாங்கிக்கொண்டு வீட்டிற்குப்போய் என்ன எழுதியிருக்கிறார் பார்க்கலாமென்று அதைப்பிரிக்க அது இங்கிலீஷில் எழுதியிருந்தது. இங்கிலீஷ் தெரிந்த ஒருவரைக் கூப்பிட்டுப் படிக்கச்சொன்னார். அதில் அடியில் வருமாறு எழுதியிருந்தது:—

திருச்சினாப்பள்ளி.

"என் சிநேகிதர் சுந்தரமய்யரவர்களுக்கு கிருஷ்ணசாமி நமஸ்காரம், இப்பவும் வருகிற பசு மிகக்கொழுத்தது; நன்றாய் கறக்கக்கூடியது! தாங்கள் வேண்டியமட்டும் கறந்துகொள்ளலாம். எனக்கு வழக்கமான பசு ஒன்றிருக்கிறபடியால் இந்தப் பசுவை தங்களிடம் அனுப்பியிருக்கிறேன். இங்ஙனம் கிருஷ்ணசாமி" என்றுஎழுதியிருந்தது. சேஷய்யருக்குஇதைப்பார்க்க வெகுகோபம் உண்டாகிவிட்டது. பார்த்தனையா வக்கீல்கள் நம்மையெல்லாம் பசுவுக்கு சமானமாக நினைத்து நம்மிடம் கறக்கப் பார்க்கிறார்கள் என்று நினைத்து இருக்கட்டும் பார்க்கலாமென்று அந்த வக்கீல் சுந்தரமய்யரிடம் போனார். அவர் சேஷய்யர் சொன்னதைக்கேட்டுவிட்டு ஏனையா குட்டிச்சுவரில் முட்டிக்கொள்ள வென்னெழுத்தா. ஒரு குடும்பத்தில் மானேஜ்பண்ணுவதென்றால் விளையாட்டா. இந்தக் கடன்முழுவதும் உமது தமயனைக் கட்டுப்படுத்துமே யல்லாது உம்மைக்கட்டுப் படுத்தும்படி சட்டமே இல்லையென்றார். செலவுக்கு ரூபா 2,000 செல்லுமென்றும் அதை பிரதிவாதியிடமிருந்து பிறகு வாங்கிவிடலாமென்றும் சொன்னார். காமேசுவரய்யர் கிருஷ்ணசாமி அய்யர் இஷ்டப்படியே அவரிடம் போனார். கிருஷ்ணசாமி அய்யரும் காமேசுவரய்யர் சொன்னதைக் கேட்டுவிட்டு இதில் உமக்கு சந்தேகமென்ன ஐயா. உமது தம்பி பெண்

கலியாணத்தின் செலவும் அதற்காககட்டின வீட்டின் செலவும் உம்மை எப்படி கட்டுப்படுத்தும். நீர் இது விஷயத்தில் சந்தேகப்பட வேண்டியதில்லை. செலவிற்குமட்டும் 2,500-ரூ ஆகும் அதையும் வாதியிடமிருந்தும் வாங்கிவிடலாமென்றார். காமேசுவரய்யர் இதைக்கேட்டுக் கொண்டு வீட்டிற்குப் போகவும் சேஷய்யர் வந்து இவரை நமஸ்காரம் செய்து கடிதத்தைக் கொடுத்தார். காமேசுவரய்யர் கடிதத்தை பார்த்துவிட்டு எனக்கு முன்னமேயே தெரியும். கிருஷ்ணசாமி அய்யனும் என்னிடம் ரூ-2500 தட்டப்பார்த்தான். என்னிடம் என்ன ஜாலம் செய்தான். பார்த்தேன். இந்த வக்கீல்களிடம் போனால் இப்படித்தான் தேவடியாள் மயக்குவதுபோல மயக்கிவிடுவார்களென்று பயந்து வந்துவிட்டேனென்றார். சேஷய்யர் என்னையும் ரூ.2,000 கொண்டுவரச் சொன்னார். குட்டிச்சுவரில் முட்டிகொள்ள வெள்ளெழுத்தா. எல்லாச்செலவும் உமது தமயனைக் கட்டுப்படுத்துமேயல்லாது உம்மைக் கட்டுப்படுத்தாது என்றார். அவர் கடிதத்தைப் பார்த்த பிறகல்லவா இவர்கள் நம்மிடம் கறக்கிறவர்களேயொழிய கொடுக்கிறவர்களல்லவென்று எனக்குத் தோன்றிற்று என்றார். காமேசுவரய்யர்—எல்லாம் இப்படித்தானப்பா. ஊரிரண்டு பட்டால் கூத்தாடிக்கு எளிது. எனக்கும் கிருஷ்ணசாமி அய்யன் சகல செலவும் உமது தம்பியைப் பொறுக்குமேயல்லாது உம்மைக் கட்டப்படுத்தாது என்றார்.

சேஷய்யர்—அண்ணா இவர்களுக்கெல்லாம் நமது சொத்தை கொள்ளைகொடுத்து பிறகு சரிபாகமாக நாம்பங்கிட்டுக்கொள்வதைவிட அவர்களுக்குகொடுப்பதில் பாதியை இப்போது நான் தங்களுக்கு தள்ளிக்கொடுத்த போதிலும் சொத்து நமது குடும்பத்திலேயே இருக்கிறது. வீணில் வக்கீல்கள் கொள்ளையடிப்பதில் யாருக்குத்தான் பிரயோஜனம். வெங்கட்ராம சாஸ்திரிகள்கூட நாளைக்கு வக்கீலிடம் போய் யோஜித்து வியாஜ்யத்தைப் போட்டுவிடலாமென்றார். நான் ஆகட்டுமென்று சொல்லிவந்தேன். அவருக்கு தெரிந்தால்கூட நம்மை ராஜியாய் போகவிடமாட்டார்களென்றார். காமேசுவரய்யர்—ஆமாம் கிருஷ்ணசாமியும் என்னிடம் வெகுநேரமிருந்து உபதேசம்செய்து ஒருபோதும் வீட்டுச்செலவையும் கலியாணச்செலவையும் நீங்கள்பொறுத்துக்கொள்ள வேண்டாமென்றான். நான் அவனுடைய எண்ணங்களைப்பார்த்து அவனுக்கு சம்மதிப்பதுபோல் காட்டிக்கொண்டேனென்றார்.

சேஷய்யர்—அண்ணா வக்கீல்கள்கூட நமக்கு வேண்டியதில்லைபோலிருக்கிறது! அவர்களைப் பார்க்கிலும் இன்னும் அதிகமாக கொள்ளையடிக்கக்கூடியவர்களாக கிருஷ்ணசாமியும் வெங்கட்ராமசாஸ்திரியும் இருக்கிறார்களென்றார். காமேசுவரய்யர், நல்லது நியாயப்படி செய்வதில் உனக்கென்ன ஆக்ஷேபணையென்றார். சேஷய்யர் அண்ணா இனி நீங்கள் எப்படி சொன்னாலும் சரிதான் அந்தவக்கீல் நம்மை பசுவுக்குசமானமாகநினைத்து நம்மிடம் பணம் கறப்பதைவிட நான் தங்களுக்குஒத்துக்கொடுத்தாலும் எவ்வளவோ பிரயோஜனமுண்டு. தாங்களெப்படி சொன்னாலும் கேழ்க்கிறேனென்றார் உடனே காமேசுவரய்யர் மனமிரங்கி வீட்டுக்கடனில் முக்கால்பங்கும் கலியாணச்செலவில் முக்கால்பங்கும் தான்பொறுத்துக்கொள்வதாகவும் சொத்திலும்முக்கால்பங்கு கிரமம்போல் ஒப்புக்கொள்வதாகவும் சொன்னார். பிறகு அந்தப்படியே தீர்மானித்து சகலகணக்குகளையும் பார்த்துக்கொண்டு பாகம்செய்துக் கொண்டார்கள்.

நாராயணசாஸ்திரிகளுக்குதன் காரியம்முடிந்ததில் வெகுசந்தோஷம். உடனேபங்களாகட்டும்வேலையை தன் மானேஜ்மெண்டில் விடும்படிகேட்டுக்கொண்டு அந்தப்படியே பார்க்க ஆரம்பித்தார். பந்தலூர்கிராம நிலங்களும் சேஷய்யருக்கே பாகத்தில்விடப்பட்டன. சேஷய்யர் பங்களாவுக்கென்று ரூ 10,000 மதுர் நாட்டுக்கோட்டை செட்டியிடம் கடன்வாங்கினார். நாராயண சாஸ்திரிகளும் வெங்கட்ராம சாஸ்திரிகளும் இனி தங்களுக்கு விஜாரமில்லையென்று தீர்மானஞ்செய்துகொண்டு பந்தலூரிலேயே குடியாயிருந்தார்கள். நாராயணசாஸ்திரிகளுக்கு தாய்பிள்ளையென்றுகூட கிடையாது. யாரிடத்திலும்பணம் கொள்ளையடிக்கப்பட்டவர்தான். சேஷய்யருக்கு பங்களா செலவுபாதி. நாராயணசாஸ்திரிகள் செலவுபாதி. கடைசியாக 6 மாசத்திற்குப் பிறகு சேஷய்யர் பங்களா முடிவுபெற்றது. செலவும் உத்தேசம் 10,000 ரூபாய்க்குமேல் 5000 ரூபாய்கூட ஆனது. சேஷய்யர் பங்களாவைப்போல் அந்தஜில்லாவில் துரைகள் பங்களாகூட அவ்வளவுநேர்த்தியாக இல்லை. வெகுவினோதமான தோட்டங்களும் பங்களாவுக்கு அமைக்கப்பட்டன. கலெக்டர்கள் முதலிய உத்தியோகஸ்தர்கள் வேண்டுமென்றே சேஷய்யர் பங்களாவுக்கு முகாம்போட்டுக்கொண்டு சேஷய்யர் பங்களாவிருப்பதற்காகவே வருவார்கள். வந்துவிட்டால் சேஷய்யருக்கு செலவுக்கு குறைச்சலில்லை. சப்ளை முழுவதும் சேஷய்யருடையது தான். பங்களாசட்டி முடிந்தவுடன் சேஷய்யர் புதுவீடு கிருகப்பிரவேசம் செய்ததானது, ஓர் கலியாணம்போல விளங்கிற்று. வெறும் நாகசுரம்போதாமல் பாண்டுவாத்யம், சதிர் முதல் தருவிக்கப்பட்டன. அந்தஜில்லா உத்தியோகஸ்தர்கள் முழுவதும்கிருகப்பிரவேசகலியாணத்திற்கு அழைக்கப்பட்டு வந்திருந்தார்கள். சேஷய்யருக்குகிருகப்பிரவேசசெலவே 1000 ரூபாய்க்குமேலிருக்கும். காமேசுவரய்யருக்கு இதுகளெல்லாம் மனதுக்குபிடிக்கவில்லை. தான் இவனைவிட்டுப்பிரிந்ததே நலமென்று நினைத்தார். காமேசுவரய்யர் பாகஞ்செய்துகொண்டும் சேஷய்யர்மீது பிரியமில்லாமலிருக்கவில்லை. கிருகப்பிரவேசத்திற்கும் வந்திருந்து எல்லாவற்றையும் வகித்துப்பார்த்தார். ஆகிலும் சேஷய்யர் அப்படி செலவுசெய்ததில் காமேசுவரய்யருக்கு வருத்தம் அதிகம்தான்.

(இன்னும் வரும்.)

எஸ். இராமஸ்வாமி ஐயர், பி. ஏ.

# A "WOMAN'S VIEW" OF "WOMAN'S EDUCATION."

ஸ்ரீ சிவாஸப்ரஸன்னம்.

## "ஸ்திரீவித்யாப்யாஸ"த்தைப்பற்றி ஒரு ஸ்திரீயின் அபிப்பிராயம்.

(By Srimati C. Andalammal.)
[After the Original Canarese by a Hindu Lady]

யஸ்ஸர்வாஸுக்த்வக்யாதிம் ப்ராபாகிலாவநாச்ச்ரீபீ [லசஹ
ஸோயம்யோஷித் யகிலாநாம் சஸ்தநீப்ரதோஜீயாத்

ஸ்திரீகளுக்கு வித்யாப்யாஸம் அவசியமா அனாவசியமா என்கிற விசாரத்தில் வித்யாப்யாஸம் அனாவசியமென்று ஜனங்கள் ஸாமான்யமாய் சொல்லுகிறார்கள். இப்படிப்பட்டவர்கள் வித்தை என்றால் ஜீவனோபாய ஸாதகமென்று தெரிந்துகொண்டிருக்கிறார்கள். மேலும் இந்த வித்யாப்ராப்தியில் ஸ்திரீகளுக்கு ஸ்வதந்திரங்கள் உண்டாகி அதனால் தாங்கள் திரஸ்கரிக்கப் படுவார்களென்ற பயமும் ஒரு பக்கமிருப்பதனால், புருஷர்களிற் பெரும்பாலார் ஸ்திரீகளுக்கு வித்தை அனாவசியமென்று சொல்வது ஸஹஜமே. ஆனால் வித்யாஸப்தத்துக்குப்பொருள், தொழில் அல்லது கர்த்தவ்யமென்று சொல்லத்தக்கது. மேலும் வித்தையானது இஹபரங்களுக்கு ஸுகத்தை உண்டாக்குவதற்குக் காரணமான ஞானம் பக்தி விவேகம் முதலான சாதகங்களைப் பஞ்சேந்திரியங்கள் மூலமாய் மனஸுக்கு கொடுக்கத்தக்க அவ்யக்தமான ஒரு சக்தியாயிருக்கிறது. இந்த சக்தியின் ஸாதனத்தினாலேயே நமக்கு நம் சுற்றிலுமிருக்கிற பதார்த்தங்களுடைய விசார ஞானம் உண்டாகத்தகுந்தது. இப்படிப்பட்ட ஞானமாகட்டும் அல்லது அதற்கு ஸாதனமாயிருக்கிற வித்தையாகட்டும் மனுஷ்யாள் என்று பேருள்ள யாருக்குத்தான் அனாவசியமானது? எல்லாருக்கும் அவசியமானதுதான்! எப்படியென்றால்,

வித்யாததாவிநயம் விநயாத்யாதி பாத்ரதாம்
பாத்ரத்வாத்தநம் ஆப்னோதித நாத்தர்மம் கதஸ்ஸுகம்.

ஆகையால் வித்தையானது ஸ்திரீ புருஷாள் உபயத்ராளுக்கும் ஸமமாக இருக்கிறது. ஏனெனில்,

வித்யாநாமநாஸ்ய ருபமதிகம் ப்ரச்சந்நப்தம்தனம்
வித்யாபோககரியசஸ்ஸுககரீ வித்யா குரூணாம்குரு:
வித்யாபந்து ஜனே விதேசகமனே வித்யாபராதே [வதா
வித்யாராஜஸு பூஜ்யதே நஹிதனம் வித்யாவிஹீ [ன: பசு:

—என்று சொல்லியிருக்கிறதினாலே இஹபர ஸுகங்களுக்குக் காரணபூதமான தர்ம அர்த்த காம மோக்ஷங்களென்ற நாலு புருஷார்த்தங்களை அடைய வேண்டியிருந்தால் ஸ்திரீ புருஷாளிருவரும் வித்யாவந்தர்களா யிருக்கவேண்டும். அப்படி யில்லாமலிருந்தால் 'எருது வருக்கிழுத்தது எருமைக்கடா ஜலத்திற்கு இழுத்தது' என்ற பழமொழிபோல் இருவருடைய வாழ்வும் திண்டாடிப்போம்.

புருஷர்களுடைய சகாயம் ஸ்திரீகளுக்கும் ஸ்திரீகளுடைய சகாயம் புருஷர்களுக்கும் அவசியமாய் இருக்கவேண்டு மென்பதானது ஒருவருக்கொருவர் ஏற்படுத்திக்கொள்வது அல்ல! ஸ்வபாவஸித்தமாகவே இருக்கிறது. இப்படி ஸ்திரீ புருஷாள் இருவரும் ஒரே பாவமாய் இருக்கவேணுமென்ற சட்டளையானது நிர்ப்பந்த ரூபமாய் நியமிக்கப்பட்ட பிர்ம்ம ஸங்கல்பமாயும் முன்னோர்களுடைய கட்டளையாயுமிருப்பதால் அதை மீறி நடக்கிறது அஸாத்தியமானது. ஆகையினால் இருவர்களும் ஒரே ஸ்தலத்திலே ஒரே பாவத்தோடு இருந்தே தீரவேண்டும். இப்படியிருக்கும்பொழுது, 'ஸ்திரீகளுக்கு வித்தியாப்யாஸம் கூடாது' என்று சொல்லி மதம் பிடித்த யானையானது தன்னுடைய தேகம் அழுக்காகுவதை யறியாமல் விளையாட்டினால் மண்ணை தும்பிக்கையால் எடுத்துப் போட்டுக்கொள்வது போல, இந்தப் புருஷர்கள் தங்களுடைய ஸ்திரீகள் 'அனர்த்தத்திற்கு மூலமாகிறதை' தங்களுடைய கண்களினால் பார்த்து ஸஹித்துக்கொண்டிருக்கிறார்கள்! இது அவர்களுடைய அர்த்த-சரீரிகளான அபலைகளுக்கு வெகு துக்ககரமாயிருக்கிறது.

ஸ்திரீகளுடைய அதீனத்திலே புருஷர்கள் இருக்கவேண்டியதாயிருக்கிற காலபரியாணத்தையும் அவஸ்தா பேதத்தையும், அதன்பிறகு புருஷர்களுடைய அதீனத்திலே ஸ்திரீகள் இருக்கவேண்டியதான காலபரிமாணத்தையும் நன்றாய் யோஜிக்குமளவில் இந்த இருவர்களுக்குள்ளே யாருக்கு வித்தையும் தத்ஸாதன பூதமான ஞானமும் அதிகமாயிருக்க வேண்டுமென்பது ஸ்பஷ்டமாய் விளங்குகிறது! விசாரித்துப் பார்ப்போம்.

ஸ்திரீ புருஷர்கள் இருபாலாரும் முதலில் ஸ்திரீகளுடைய கர்ப்பத்திலேதானவதரிக்க வேண்டியிருக்கிறது. பிரகிருதத்தில் புருஷர்களுடைய விஷயத்தை விசாரிக்கலாம். இப்பொழுது வித்வாம்ஸாளாய் ஸ்திரீகளுக்கு ஸபையில் இடம் கொடுக்கக்கூடாது என்று தடுக்கும் புருஷர்கள் கூட பத்துமாதம் ஸ்திரீகளுடைய கர்ப்பத்தில் இருக்கி

றதுமல்லாமல் இவர்களுடைய வாழ்நாட்களெல்லாமும் இவர்களை வயிற்றில் தரித்த ஸ்திரீகளுடைய அதீனத்திலேயே இருக்கிறதில்லையா. ஆம்! இருக்கிறார்கள். ஆகையால் ஸ்திரீகளுக்கு வித்யாப்யாஸத்தைக் கொடுத்திருந்தால் தாய்கள் கர்ப்பிணியான காலத்தில் ஸத்கதா சிரவணம் செய்கிறதும் எப்பொழுதும் சுத்தமாயிருக்கிறதும் ஸதா நல்ல எண்ணங்களை எண்ணுகிறதும் இந்தப்பிரகாரம் அவர்கள் யோக்யர்களாயிருந்து கர்ப்பத்தை நன்றாய் ரக்ஷித்துக்கொண்டு நல்லபுத்ர புத்ரீரத்னங்களையடைவார்கள். மேலும் ஸ்திரீகள் ஸத்குலத்தில் பிறந்தவர்களானவர்களாகியும் யோக்யாளாயும் இருந்தால் குழந்தைகள் யோக்கியர்களாகவே பிறப்பார்கள். எனெனில் சிங்கத்தின் வயிற்றில் சிங்கக்குட்டிதான் பிறக்கும். அல்லாமல் ஸ்திரீகள் வித்யாஹீனர்களாயும் மூடர்களாயும் துர்மார்க்கப்ரவர்த்தகர்களாயும் இருந்தால் அவர்கள் கர்ப்பத்தில் உண்டாகிற குழந்தைகளும் அவர்களுடைய குணங்களையே பின்பற்றுவார்கள். எப்படியென்றால் வேப்பமரத்தில் வேம்பு உண்டாகுமேயொழிய தித்திக்கும் மாம்பழமொருக்காலு முண்டாகாது. மறுபடியும் "தாயைப்போல மக்கள்" "நூலைப்போல சேலை" என்ற பழமொழிப்படியாகிறது. இதற்கு உதாரணமென்னவென்றால், பூர்வத்தில் பிரஹ்லாதன் விஷ்ணுபக்தனாகவேணுமென்று நாரதர் ஆலோசித்து அவனுடைய தாயார் கர்ப்பிணியாயிருக்கும் காலத்தில் அவளுக்கு விஷ்ணு பக்தியை உபதேசித்தார் அதனாலேயே அவன் விஷ்ணு பக்தனானான். அவனுடைய தகப்பனான ஹிரண்யகசிபு விஷ்ணு பக்தியைக் கண்டித்து அவனை சிவபக்தனாய் ஆக்க வேண்டுமென்று எவ்வளவு பிரயாஸைப்பட்டாலும் ஸாத்தியமாகவில்லை. இதுபோலவே, குபேரனுடைய தாயார் கர்ப்பிணியாயிருந்த காலத்தில் வேதசிரவணத்தைப் பண்ணினதினாலேயே அவனுக்கு வைசிரவணன் என்கிற பெயர் உண்டாயிற்று. இந்த இரண்டு திருஷ்டாந்தத்தினாலே தெரியவருகிறது என்னவென்றால்: குழந்தைகளுக்கு தாயாருடைய கர்ப்பத்திலிருக்கிற ஸமயத்தில் சிரவண மனனங்களினாலே உண்டான ஞானமே சாஸ்வதமாய் நிற்குமென்று தெரியவருகிறது.

நான் மேலே சொல்லியிருக்கிறதில் கர்ப்பிணிகளான காலத்தில் மாத்திரம் நல்ல சாஸ்திர சிரவணமும் அப்யாஸமும் வேண்டும், இதரகாலங்களில் வேண்டாமென்று அபிப்பிராயமா? இல்லை. பால்யமுதல் வித்யாப்யாஸம் செய்து யுக்தாயுக்தங்களைத் தெரிந்துகொண்டு யோக்கியர்களாயிருந்தால் கர்ப்பிணியாகும் காலத்திலும் அதேரீதியாய் நடக்கிறதற்கு அனுகூலமாயிருக்கும். அப்படியில்லாமல் அந்தக்காலத்தில் மாத்திரம் சாஸ்திர ஸம்பந்தமான ஞானமுண்டாக வேணுமென்றால் தாகமுண்டான ஸமயத்தில் கிணறுவெட்டுகிறதற்குப்பிரயத்தனப்படுகிறதுபோலேயும் யுத்தகாலத்தில் சஸ்திராப்யாஸம் போலவும் ஆகும். ஆகையினால் பால்யமுதல் வித்யாப்யாஸம் பண்ணவேண்டியது. தாய்களின் விவேகமே குழந்தைகள் யோக்கியர்களாகிறதற்கும் பலாட்டியர்ளாய் ஆயுர்வந்தாளாயிருக்கிறதற்கும் காரணபூதமாகிறது. மேலும் குழந்தைகளுடைய அபிவிர்த்திக்குக்கூட தாய்களே காரணம்: அது எப்படியென்றால் பூர்வகாலத்தில் துருவன் தன் தகப்பனாலே உதாஸீனம் பண்ணப்பட்ட போதிலும் சாஸ்திரஞானமுள்ள தாயாரின் தத்வோபதேச விசேஷத்தினாலேயே பகவானுடைய கடாக்ஷத்தை அடைந்து லோகோத்தரமான பதவியையும் சாஸ்வதமான கீர்த்தியையும் பெற்றான். அகண்டத்திற்கு அற்பத்தை (தகராகாசம்) ஒப்பிட்டுச் சொல்லுமாறுபோல், அற்பமாகிய நான் சொற்பஞானம் பெற்றதும் தாயாருடைய விவேக சாஸ்திர ஞான விசேஷத்தாலென்றே சொல்லல்வேண்டும். மேலும் பூர்வகாலத்தில் அருணன் மகரிஷியான கசியபருடைய வாத்தினாலே பிறந்தவனானாலுங்கூட தாயினுடைய அவிவேகத்தினாலேயே அங்கஹீனனாய்ப் பிறக்கவில்லையா. காந்தாரியானவள் தான் கர்ப்பமான காலத்தில் குந்தியினிடத்தில் தர்மராஜன் பிறந்தானென்றுகேட்டு அஸூயையினால் தன்னுடைய கர்ப்பத்தைக் கல்லினால் அடித்துக் கொண்டதினாலல்லவா அவளுடைய புத்திரர்களான துரியோதனாதிகளுக்கு துச்சப்த பூர்வகமான பெயர் உண்டாயிற்று. கடைசியிலும் அவர்கள் அஸூயையுடையவர்களாய் லோகத்தையெல்லாம் நாசம்செய்து தாங்களும்கூட நாசமடைந்தார்கள். இப்படியிருக்கிறதினாலே குழந்தைகள் யோக்கியர்களாகிறதற்கும் அபிவிர்த்தியாகிறதற்கும் தாய்களே கார்ணமல்லவா? ஆம். ஆனதினாலேயே ஸ்திரீகளுக்கு வித்யாப்யாஸமும் சாஸ்திர ஞானமும் அத்யாவசியமாய் இருக்கவேண்டியது.

பிரஸவ காலத்தில் ஸ்திரீகளே ஸமீபத்திலே இருக்கவேண்டியிருக்கிறதல்லவா. அவர்கள் சரீரதர்ம சாஸ்திரத்தையும் (Physiology) சிசுரக்ஷணமுறையையும் வாசித்து நிரம்ப புத்திவந்தர்களாயும் அனுபவசாலிகளாயும் இருக்கவேண்டும். அப்படியில்லாதபட்சத்தில் குழந்தைக்கும் பிரஸவித்தவளுக்கும் அநேக சமயங்களில் வெகுவிதமான அபாயங்கள் நேரிட்டு அனர்த்தங்கள் நேரிடுகின்றன. ஆனபடியால் இவ்விதங்களான அனர்த்தங்கள் உண்டாகாமல் இருக்கவேண்டியதாயிருந்தாலும் ஸ்திரீகளுக்கு சாரீரக வித்யாப்யாஸம் அத்யாவசியகமாயிருக்கிறது. இப்படிப்பட்ட சாஸ்திராப்யாஸம் இல்லாமலிருக்கிறதினாலும் ஆஹாரதோஷத்தினாலும் அஜாக்ரதையினாலும் சமீபத்திலிருக்கிறவர்களுடைய அஞ்ஞானத்தினாலும் இப்பொழுதுங்கூட அநேக சமயங்களில் அநேக சிசுக்கள் நானாவிதமான அபாயங்களை அடைந்துகொண்டிருக்கின்றன. ஆனதினால் தாய்களுக்கு வித்தை, சாஸ்திரஞானம் இல்லாமலிருக்கிறதினாலே யல்லவா இவ்விதமான அபாயங்கள் ஸம்பவிக்கின்றன. இப்படிப்பட்ட விவேகசூன்யாளுடைய கர்ப்பத்தில் ஜனித்த குழந்தைகள்

அசக்தர்களாயும் அங்கஹீனர்களாயும் ஆகி அநேக நாட்கள் கஷ்டப்படுவார்கள். தாயார்களுடைய வித்யா ஹீனதிசையினாலே குழந்தைகளுக்கு அநேகவிதமான அபாயங்கள் சம்பவிக்கின்றன. அவைகளையெல்லாம் விவரிக்கிறது அஸாத்தியம். ஸாமான்யமாய் யாதொரு சக்தியுமில்லாமத பராதீநமான சிசுத்தன்மையிலே எல்லாரும் ஸ்திரீகளினாலேயே போஷிக்கப்பட வேண்டியவர்களாயிருக்கிறார்கள். அக்காரணத்தினால் ஸ்திரீகள் ஸுகாதார சாஸ்திரத்தை (Hygiene) வாசித்து அதிக புத்திவந்தர்களாயும் அனுபவசாலிகளாயும் இருக்க வேண்டும். அப்படியிருக்கும் பட்சத்தில் அதுபுருஷர்களுடைய அபிவிர்த்திக்கே காரணமாகிறது. அப்படியில்லாமல் ஸ்திரீகள் மூடர்களாயும் சோம்பேரிகளாயும் இருந்தால் மேலே சொன்னபிரகாரம் அவர்களுடைய அவிவேகத்தினாலுண்டான அபாயங்களை ஜன்மாதியாக தேகமிருக்கிற பரியந்தம் அனுபவிக்கவேண்டியதாயிருக்கும் மேலும் குழந்தைகளுக்கு தேகத்தின் சக்தியும் குறைந்ததாகவே இருக்கும். அவைகளுக்கு வியாதிகள் பின்தொடர்ந்தே வரும். அந்த ஸமயத்தில் தாயானவள் ஸுகாதார சாஸ்திரத்துடன் பின்னும் வைத்திய சாஸ்திரத்தயையும் அப்யஸித்திருந்தால் இலகுவாகவே அவைகளை குணப்படுத்துவள். அப்படிக்கில்லாமல் பெரிய வைத்தியர்களுக்குக்காட்டினால் விபரீதமாய் பரிணமிக்கும். ஏனென்றால் குழந்தைகளுடைய தேகஸ்திதி வைத்தியர்களைக்காட்டிலும் தாயவளுக்கே நன்றாய்த் தெரிந்திருக்கும். மேலும் "வயிற்றைகட்டித் தொட்டிலேக்கட்டு" என்ற பழமொழியை யனுஸரித்து தாயாரானவள் தெரிந்தவளாயும் வித்யாவந்தளாயும் தன்னுடைய நித்திரை ஆகாரங்களைப் பார்த்துக்கொண்டு குழந்தைகளை சரியாக ரக்ஷித்தால் அவைகளுக்கு வியாதிகளே வருவதில்லை. அப்படியே வந்தாலும் அவ்வளவு அனர்த்தத்திற்குஹேதுவாகாமல் ஸ்வல்பத்திலேயே நிவர்த்தித்துக்கொள்ளும். மேலும் கௌமாரவயதிலும் துர்மார்க்கத்தில் பிரவர்த்திக்காமலும்துஸ்ஸஹவாஸம் பண்ணாமலும் கெட்ட சேஷ்டைகளைக் கற்றுக்கொள்ளாமலும் பார்த்துக்கொண்டுவித்யா புத்திகளைக்கற்பித்து ஸன்மார்க்கப் பிரவர்த்தகர்களாகச் செய்வது தாயார்களுடைய கடமையாகிறது. ஆனபடியினாலேயே இந்த ஸந்தர்ப்பத்திலும் ஸ்திரீகளுக்கு வித்யாப்யாஸம் அத்யாவசியகமல்லவா.!

யௌவனத்தில் பத்னியானவள் இவனை அன்னபானாதிகளினாலே போஷிக்கவேண்டும். ஆகையினாலே இவள் பாகசாஸ்திரம் ஆரோக்கிய சாஸ்திரம் இவைகளையெல்லாம் அப்பியாஸம் பண்ணப்பட்டவளாயிருந்தால் பதார்த்தங்களைப் பரிசோதித்து எந்தெந்தப்பதார்த்தங்கள் ஆரோக்கியத்திற்கு அர்ஹமாயிருக்கிறதோ அந்தந்தப் பதார்த்தங்களை பாகம் செய்து பதியின் தேகஸ்திதியை யனுஸரித்து காலாகாலத்தில் தப்பாமல் போஜனம்செய்து வைப்பள். மேலும் நீதிசாஸ்திரத்தில் என்ன சொல்லியிருக்கிறதென்றால் :—

கார்யேஷுதாஸீ கரணேஷுமந்த்ரீ ரூபேசலக்ஷ்மீ:
[க்ஷமயா தரித்ரீ,
போஷேதுமாதா சயனேசரம்பா ஷாட்குண்யயுக்தா
[குலதர்மபத்நீ.

என்று சொல்லியிருக்கிறதினாலே பத்னியானவள் போஜன ஸமயத்தில் அதிகமான ஆதரவினாலும் புன்சிரிப்புடன் கூடியமுகத்தினாலும் மேலே சொல்லப்பட்ட குணகர்ம நிரதளாயும் பதிக்கு போஜனத்தை செய்வித்தால் அந்த போஜனமானது பதிக்கு எவ்வளவோ ஸந்தோஷத்தை உண்டாக்குகிறதல்லவா. ஸதிரீயானவள் இந்த ரீதியாய் நடக்கவேண்டியிருந்தால் இந்த ஸந்தர்ப்பத்திலும் ஸ்திரீகளுக்கு வித்யாப்யாஸம் அதிக அவசியமல்லவா! புருஷர்களுக்கு தர்மத்தை யாசரிக்கவேண்டியிருநதால் எல்லா ஆசிரமங்களிலும கிருஹஸ்தாசிரமமே முக்கியமாகிறது. ஏனெனில்,

க்ருஹஸ்த ஏவயஜதே க்ருஹஸ்த ஸ்தப்யதேதப:
அகிருஹஸ்தஸ்ய யத்கிஞ்சித்கர்மகர்த்துநயோக்யதா

என்று சொல்லியிருப்பதினால் கிருஹஸ்தாசிரமத்தை அவலம்பித்த புருஷன் எந்தக் கர்மத்தையும் செய்ய அதிகாரியாகிறான். மேலும்,—

யதாமாதர மாச்ரித்ய ஸர்வேஜீவந்தி ஜந்தவ:
க்ருஹஸ்தான ஹிவ்யாபாச்ரித்ய வர்த்தந்த இதராச்ர
[மா :

இந்த ரீதியாக எல்லா ஆசிரமங்களுக்கும் கிருஹஸ்தாசிரமம்தான் மாத்ருப்ராயமானது. இப்படிப்பட்ட கிருஹஸ்தாசிரமியான புருஷனுக்கு முக்கியமாய "பத்நீபலம் கிருஹஸ்தானாம் பக்ஷாவை பக்ஷிணாம்பலம்" என்பதுபோல, பக்ஷிகளுக்கு ற்றக்கைகளின் ஸகாயமானதுஎவ்வளவு அவசியகமோ, கிருஹஸ்தனுக்கு யோக்கியமான பத்னீயானவள் அவ்வளவு அவசியம். யக்ஞயாகாதிகளை நடத்தவேண்டியிருந்தால் பத்நீயின் ஸஹாயத்தினாலேயே நடக்கவேண்டியதல்லவா. அக்காலத்தில் அவர்களுக்கும் கூட வேதாதிகாரம் உண்டல்லவா. இரண்டும் அதி அவசியகமாகிறது. இப்படியிருக்கும்பொழுது அவர்களுக்கு சாஸ்திராப்யாஸம் இல்லாமல்போனால் ஸத்கர்மங்களெல்லாம் எப்படித்தான் சாங்கமாக நிறைவேறும்? மேலும்,—

அனேகசம்சயோச்சேதி பரோக்ஷார்த்தஸ்யதர்சகம்.
ஸர்வஸ்யலோசனம் சாஸ்திரம் யஸ்யநாஸ்தியந்த
[ஏவஸ:

இவ்விதமாய் வித்யாப்யாஸமில்லாத எந்திஸ்த்ரீ புருஷரும் குருடர்களேயென்று சொல்லுவார்கள். எல்லாருக்கும் ஞானமே கண்ணாயிருக்கிறது. அதின் ஸஹாயத்தினாலேயே எல்லாரும் தங்களுடைய தர்மாதர்மத்தை அறிந்து நடக்கவேண்டும். ஆனால் "அனப்யாஸேவிஷம் சாஸ்திரம் அப்யாஸாத் அமிருதோபமம்." என்று சொல்லுகிறபடியால் அப்பியாஸம் பண்ணாமலிருக்கிற சாஸ்திரோக்திகளும் மற்றும் நீதிகளும் விஷமாய்த் தோன்றுகின்றன. ஆன

தினால் அவர்கள் ஸ்வேச்சையாய் நடக்கிறார்கள். ஆனதினாலேயே ஸ்ரீ கிருஷ்ணன் அர்ஜுனனுக்கு

வ்யவஸாயாத்மிகாபுத்திரே கேஹகுருநந்தன :
பஹுசாகாஹ்யனந்தாச்ச புத்தயோவ்யவஸாயினாம்.

என்று சொல்லியிருக்கிறதினாலே புத்திக்கு சாஸ்திராப்யாஸமே வ்யவஸாயம். அப்படிப்பட்ட புத்தியானது ஸன்மார்க்கத்திலேயே பிரவர்த்தித்துக் கொண்டிருக்கிறது. மேலும் வியவஸாயமில்லாத பூமியானது களைகளினாலே எப்படி மூடப்படுகிறதோ அப்படி வித்யாவ்யவஸாயமில்லாத புத்தியானது நானாவிதமாய் கிளம்பி துன்மார்க்கத்திலேயே பிரவர்த்திக்கிறது. இப்படியிருக்கும்பொழுது ஸ்திரீகள் துன்மார்க்கப் பிரவர்த்தகர்களாவார்களானால் புருஷர்கள் தங்களுடைய குலகோத்திரங்களை அறியாமல் போகிறார்கள்.

அதர்மாபி பவாத்கிருஷ்ண ப்ரதுஷ்யந்தி குலஸ் [திரிய :
ஸ்திரீஷு துஷ்டாஸு வார்ஷ்ணேயஜாயதேவர்ண [ஸங்கர :
ஸங்கரோ நாகாயைவ குலக்னானாம் குலஸ்யச
பதந்தி பிதரோஹ்யேஷாம் லுப்தபிண்டோதக [க்ரியா :

—என்று சொல்லியிருக்கிறதினாலே ஸ்திரீகள் துஷ்டர்களாயாவார்களேயானால் உபயகுலத்திற்கும் நாகாதி அனர்த்தங்கள் உண்டாகிறதல்லவா?

தர்மாசாரா : ப்ரஹீயந்தே நீசைஸ்ஸஹவாஸயாகமாத்.

—என்று இருக்கிறதினாலே புருஷனுக்கு நீசளான ஸ்திரீயின் ஸஹவாஸதினாலே எந்த தர்மங்களும் நடக்கிறதில்லை,

யாநாரீகுடிலாகேஹேதத்கிருகம் நாபிவர்ததே.

—என்பதினால் அவசியமாய் ஸ்திரீகள் வித்யாப்யாஸம் பண்ணினவர்களாய்க் கொண்டு யோக்கியர்களாயிருக்கிறதே புருஷர்களுக்கு அம்ருதத்திற்கு ஸமானமாகிறது. எப்படியென்றால் பூர்வத்தில் திரிபுராவின் ஸம்ஸாரங்களுடைய பாதிவிரத்ய தர்மத்தினாலே அவர்களுடைய பதிகளை ஸம்ஹாரம் செய்வதற்கு திரிமூர்த்திகளுக்கே ஸாத்தியமாயிருக்கவில்லை. ஆகையால் ஸ்திரீகளுடைய தர்மமே புருஷர்களைக் காப்பாற்றவேணும். மேலும் விஷையென்கிற ஸ்திரீயானவள் உத்யானவனத்தில் நித்திரை செய்துகொண்டிருந்த சந்திரஹாஸனுடைய தலைப்பில் இருந்த காகிதத்தை எடுத்துக்கொண்டு அதை வாசித்து திருத்தி அதினாலே அவனுக்கு ஸம்பவிக்கும்படியான மரணத்தையும் மேலும் தன்னுடைய தகப்பனாருக்கு வரும்படியாயிருந்த ப்ராணஹத்தி தோஷத்தையும், ராஜத்ரோகத்தையும் மேலும் ராஜ்யத்திற்கு யோக்யமான அரசனில்லாததினாலே, நாயகனில்லாமலிருப்பதினாலே பிரஜைகளுக்கு வரக்கூடியதான கஷ்டத்தைக்கூட தப்பிவித்து தனக்கு அனுகூலமான பதியையடைந்தாள். அவள் வித்யாவந்தளாயிருந்ததினாலேயல்லவா ஒரு கவித்வத்தினாலே ஸ்வாமிகாரியம் ஸ்வகாரியம் இது இரண்டையும் செய்து பிதாவுக்கு வரக்கூடிய தோஷத்தையும் தப்பிவித்தாள். இன்னும் லீலாவதியென்பவள் மஹா பண்டிதையாய் தன்னுடைய பெயரை வைத்தே கணித சாஸ்திரத்தைச் செய்திருக்கிறாள். திரிவேணியென்பவள் திவ்யமாய் வ்யுத்பத்தியுள்ளவளாகி ஸம்பத்குமாரவிஜயமென்ற சம்பூவையும் தத்வமுத்ராபத்ரோதயமென்ற நாடகத்தையும் செய்திருக்கிறாள். சிருஷ்டிகாலத்திலே நாராயணனே லக்ஷ்மி ஸரஸ்வதிமற்றும் பார்வதி இவர்களுக்கு வித்யாப்யாஸம் செய்துவைத்திருக்கிறார். ஸ்ருஷ்டிகாலம் முதற்கொண்டு ஸ்திரீகளுக்கு பாண்டித்தியத்தைக் குறித்து விசாரித்தால் 'ஸ்திரீவித்யாப்யாஸம்' பூர்வத்திலேயிருந்தே வந்ததாகவே இருக்கிறது. ஸ்ரீ கிருஷ்ண மஹிஷியான ருக்மணியே யுக்தியினாலே ஸ்வாமிக்கு ஓலையெழுதி அவரை வரித்து உலகத்திற்கே பூஜ்யளாயிருக்கிறாள். இந்தப்பிரகாரமாய் வித்யாவந்தர்களான ஸ்திரீகள் லோகோபகாரத்தைச்செய்து தாங்கள் யோக்கியர்களாய் தங்களுடைய பதிக்கு வரத்தக்க அபாயங்களைத் தப்பிவித்து ஸுகத்தை அடைந்திருக்கிறார்கள். ஆகையினாலே பூர்வகால முதற்கொண்டு ஸ்திரீவித்யாப்யாஸமானது ஆசாரணையிலேயே இருக்கிறது. இப்படியிருக்க ஸ்திரீகள் பக்தி ஞானம் வைராக்கியம் யோகம் தபஸு ஜபம் விரதம் கீர்த்தனம் மற்றும் தானம் இவைகள் முதலான ஸத்காரியங்களெல்லாம பண்ணக்கூடிய விஷயத்தில் ஸ்ரீ கிருஷ்ணபகவான் என்னசொல்லுகிறாரென்றால்,—

பும்ஸ்த்வஸ்திரீத்வவிசேஷோவாஜாதிநாமாச்ரமாதய:
நகாரணம்மத்பஜனே பக்திரேவஹிகாரணம்.

ஆதலினாலேயே ஸ்வாமிக்கு ஸ்திரீ புருஷ பேதங்கள் எதுவும் இல்லையென்று தெரிகிறது. பக்தி யோகத்தினாலே சபரியானவள் மோக்ஷத்தையடைந்திருக்கிறாள். தியானயோகத்தினாலே திரௌபதியானவள் தன் அவமானத்தையும் பதிகளினுடைய தர்மத்தையும் காப்பாற்றி அவளுடைய பந்துக்களை விடுவித்தாள். ஸாங்க்யயோக பிரதர்சகரான கபிலர் தன்னுடைய தாயாரான தேவஹூதி தேவிக்கு ஸாங்கிய யோகத்தைச்சொல்லியிருக்கிறார். ஸுலபையென்கிற ஸ்திரீயானவள் யோகத்தில் ஸித்தியையடைந்திருக்கிறாள். சூடாலை தான் ஞானம் பெற்றும் தன் புருஷனுக்கு ஞானப்பேறுண்டாகும் பொருட்டு யோகசித்திகளையடைந்து அவனுக்குஇகபரஸுகமிரண்டையுமொருங்கேயளித்திருக்கிறாள். அநஸூயா தேவியானவள் பூர்வத்தில் தன்னுடை ஆசிரமத்தில் பன்னிரண்டு வருஷக்ஷாமத்தினாலே பலோதகங்கள் ஒன்றுமில்லாமற்போய் ரிஷிகளுடைய தபஸுக்கெல்லாம் பங்கம் உண்டாகவே தனனுடைய தபஸினாலே பலோதகங்களை சிருஷ்டித்து ரிஷிகளுடைய தபஸை நிறைவேற்றியிருக்கிறாள். தன்னுடைய விரதப்ரபாவத்தினாலேயே ஸாவித்ரீ முதலான இன்னுமனேக ஸ்திரீகள் இறந்துபோன தங்களுடைய பதிகளைப்பிழைப்பு மூட்டி அவர்களு

க்கு ராஜ்யாதிபத்தியத்தையும்கூட செய்வித்திருக்கிறார்கள். இப்படியிருக்கிறதினாலே எப்பொழுதும் புருஷர்களுடைய யோகக்ஷேமத்திற்கு ஸ்திரீகளே பாத்தியர்களாயிருக்கிறதினாலே ஸ்திரீகளுக்கு வித்யாப்யாஸத்தைச்செய்துவைப்பதினாலே உண்டாற நல்ல ஞானமே புருஷர்களுக்கு இஹபரசுகங்களை அடைவிப்பதற்கு அனுவசியமென்று சொல்லடிய புருஷர்களுடைய பாலபாஷையை (Child-Prattle) க்கேட்டு நிரம்ப வியாகூலப்படுகிறோம்.

அதற்கு மேலும் வித்தையயென்கிற வார்த்தையே பண்பாலாய் இருக்கிறது. மேலும் வித்யாபிமானி தவதையே ஸ்திரியாயிருக்கிறாள். அவளே ஸ்திரீகளுக்கு வித்தியாப்யாஸமுண்டென்பதைக் காண்பிக்கும் பொருட்டே கையிலே புஸ்தகத்தையும் வீணையையும் பிடித்துக்கொண்டிருக்கிறாள். இவளுடைய அனுக்கிரகத்தினாலேயே வியாஸர் முதலான ரிஷிசிரேஷ்டரெல்லாம் சுருதிஸ்மிருதி புராண இதிஹாஸங்களைச் செய்திருக்கிறார்கள். பிரம ஸங்கல்பத்தில் ஸ்திரீவித்தியாப்யாஸம் கூடாதென்று இருந்தபட்சத்தில் ஆதியில் வித்தியாபிமான தேவதையை ஸ்திரீயாக சிருஷ்டித்திருக்கமாட்டார். அவர் அப்படி தெரிந்திருந்த பட்சத்தில் இந்த ரீதியாய் ஸ்திரீகளுக்கு அதிகாரத்தைக் கொடுத்திருக்கமாட்டார். ஆனதினாலே இந்தப்புருஷர்கள்கூட ஸ்திரீயினுடைய கடாக்ஷத்தினாலேயே ஸமஸ்தமான ஐசுவரிய அதிகாரங்களை அனுபவிக்கவேண்டியிருப்பதினாலேயே தங்களுடைய புத்ரீகளுக்கு வித்யாப்யாஸத்தைச் செய்விக்க வேண்டியதல்லவா!

நான்மேலே சொல்லியிருக்கிறதினாலேபூர்வகாலத்தில் ஸ்திரீவித்யாப்யாஸமானது நிரம்ப உன்னத ஸ்திதியிலிருந்திருக்குமென்பது தெரியவருகிறது. மத்தியகாலத்தில் ராஜ்யநடவடிக்கைகள் கெட்டுஅநேக விதமான கெட்ட திசைகளாலே நம்முடைய ஹிந்துதேசமானது நிரம்ப ஹீனஸ்திதிக்கு வந்தகாலத்தில் மற்ற மாறுதல்களுடனே ஸ்திரீவித்யாப்யாஸமானது மூலையில் விழுந்து நிந்தைக்கு ஆஸ்பதமாயிருக்கிறது. இப்பொழுது தெய்வானுக்ரகத்தினாலே ஸேதுமுதற்கொண்டு ஹிமாலயம்வரை புனர்ஜீவிதமாய்க்கொண்டுவருகிறது. இப்பொழுது அது முளைகிளம்பிக்கொண்டிருக்கிறது. நல்லது. இந்த விஷயமாக ப்ரபஞ்சத்தில் அதிக உன்னத ஸ்திதியிலிருக்கிற தேசங்கள் எப்படியிருக்கிறது பார்க்கலாம். சீமையி(England)லிருக்கிற ஸஹோதரிகள் வித்தியாப்யாஸமில்லாமல் அவர்கள் நம் ஹிந்து ஸஹோதரிகளைப்போல மூடர்களாயும் நிரட்சரகுக்ஷிகளாயும் இருக்கும் பட்சத்தில் அந்த தேசமானது இப்பொழுது பிரபலமாயிருக்கிற மாதிரி அப்பொழுது இருந்திருக்குமா? மற்றும் இப்பொழுது பிரபஞ்சமெல்லாம் புகழுகிற ஜபான் தேசத்தில் ஸ்திரீகள் மூடர்களாயும் அஸமர்த்தர்களாகியும் இருக்கும் பட்சத்தில் ஜபானியர்கள் பூமியிலேயும் ஸமுத்திரத்தின்மேலேயும் ருஷியா தேசத்தவர்களை இப்படித் தோற்கடிக்க ஸாத்தியமாகுமா? மறுபடியும் நமக்கு நிரம்பவும் ஹிதசிந்தையோடுகூடிய அன்னிபெஸன்ட் அம்மாள் ஓர் ஸாதாரணஸதிரீதானே? அவள் மூடத்தனமாயும் வித்யாரஹிதளாயும் இருக்கும் பட்சத்தில் காசிக்ஷேத்திரத்தில் ஸென்ட்ரல் காலேஜ் என்ற பிரசித்தமான பாடசாலையானது இப்படியிருக்குமா? அல்லது தானும் விவேகியாகி உலகத்தில் உள்ளோருக்கும் விவேகம் போதித்து உத்தமளாகி இருக்கமுடியுமா?

சீமை மற்றும் ஜபான் இன்னும் அன்னிபெஸன்ட் முதலானவர்களை மெச்சுகிற நம்முடைய மாத்ரு பூமியான ஹிந்துதேசமானது அபிவிருத்திக்கு வரவேண்டுமென்று அபேக்ஷிக்கும்படியான ஓ புத்திசாலிகளாகிய ஸபையார்களே உங்களுடைய அபலைகளான புத்ரீகளுக்கு தகுந்த வித்தியாப்யாஸத்தைக் கொடுத்து அவர்களை அபிவிருத்திக்கு கொண்டுவந்தாலொழிய உங்களுடைய தேசத்தினது அபிவிருத்தி எப்படி ஸாத்தியம்?

The great poet Tenyson says:—
"The woman's cause is man's. They rise or sink
Together dwarfed or godlike, bond or free."

இவைகளெல்லாமல்லாமல் முக்கியமாக ஒரு விஷயத்தைக்குறித்து யோஜிக்கலாம். உலகத்தில் எதோ ஒன்று ஜன்மாந்தரஸுகிருதத்தை அவலம்பித்து ஸ்ரீமகாவிஷ்ணுவானவர் பிரீதியுள்ளவராகி நம்முடைய துரவஸ்தைகளைத தப்பிவிக்கிறதற்கு இந்த நிர்ப்பந்தத்தைக்கொடுத்து நமக்கு ஸுகத்தை உண்டாக்குவனென்று

ஸம்ஸாரகூபேபதிதம்விஷனயர்முஷிதேக்ஷணம்
க்ரஸ்தம்காலாஹினாத்மானம்கோன்யஸ்வாதுமர்ஹதீச்வர:

என்று தெரிந்து பகவன் தனையே நிஜபதியாகத்தெரிந்திருக்கிற நிஜ ஸந்யாஸிகளான பாலாவிதந்துகளைக் குறித்து யோஜிக்கலாம். இவர்கள் தங்களுக்கு வந்த

ஸங்யாஸமானது பகவத்னுக்கிரகத்தினலே யென்று அறிந்து தங்களுக்கு தேகத்தைக் கொடுத்ததற்கு முக்கிய காரணம் பரம புருஷனே நிஜமான பதியல்லாமல் அங்யதா இல்லையென்று அறிகிறதற்கு என்று நிச்சயிக்கவேண்டியது. இவர்களுக்கு நிஜ ஸங்யாஸியென்று எப்படி சொல்லலாமென்ருல் பால்யத்திலேயே விவாகமாகி கொஞ்சகாலத்திலேயே அநித்யபதியானவன் காலம்சென்றுபோய் தீர்க்கஜீவனத்தையடைந்து ஸம்ஸார தாபத்ரயங்களினலே வர்ஜிதர்களாய் நித்தியபதியான ஸ்வாமியை அறிகிறதற்கு ஸரியான காரணத்தை அடைந்து இருப்பதாலேயும்

துர்லபோமானுஷோதேஹோ தேஹினும் க்ஷணம
[ங்குர :
தத்ராபிதுர்லபம்மனயேவைகுண்டபிரியதர்சனம்.

—என்று தெரிந்திருக்கிறதினலேயும், தங்களுடைய சர்த்தவ்யத்தையறிந்து ஸ்திரீகளினலேயே லோகோத்தாரம் ஆகவேண்டியிருக்கிறதினலே அதை உத்தாரம்பண்ணுவதற்கு பிரயத்னம் பண்ணுவதினலேயும் பகவத் கிருபையினலே ஸம்ஸாரசுகம் தப்பியிருக்கிறதினலேயும் இவர்களை நிஜமான ஸங்யாஸிகளென்று சொல்வதில் அப்யந்தரமென்ன இருக்கிறது? பதிமுதலான பல்ன்களைக் கொடுத்து இவர்களை துர்க்கதிக்கு ஆளாக்கவேண்டியதென்று ஸ்வாமியின் சங்கல்பமல்ல. நம்மை சிருஷ்டித்து ஸம்ஸாரத்தில் நமக்கு வைராக்கியமுண்டாகவேண்டுமென்று பதிபத்னீ புத்ரகிருஹமுதலான ஸம்பத்துகளைக்கொடுத்து அதினல் நமக்கு ஸங்கடங்களைக் காட்டிவைத்து பிறகு நமக்கு தன்னிடத்தில் பக்தி பிறக்கும்படியாகச்செய்து கடைசியில் சத்கதியைக் கொடுக்கவேண்டுமென்பதே பரம புருஷனுடைய அபிப்பிராயமாயிருக்கிறது. மேலும் ஸம்ஸாரியானவர்களுக்கும் பலாத்காரத்தினலே ஸர்வத்தையும் த்யஜித்து வைராக்கியத்தையடைந்து ஸங்யாஸிகளாகச்செய்வார். இப்படியிருக்கும்பொழுது தெய்வ சங்கல்பத்தினலேயே எல்லாவற்றையும் விடுவித்திருக்கிற மேற்சொன்ன ஸங்யாஸிகளான பாலவிதந்துகளுக்கு வித்யாப்யாஸத்தைக் கொடுக்காமல் அவர்களை முட்டாள்களாயிருக்கும்படி செய்து வழிதப்பிவிக்கிறதைவிட ஸரியான வித்யாப்யாஸத்தைக் கொடுத்து ஞானத்தை அடைகிறதற்கும் ஞானத்தினலே வைராக்கியமடைகிறதற்கும் ஸங்யாஸினீவிருத்தியினலே பகவானை ஆராதித்து பகவதனுக்கிரகத்திற்கு பாத்ராளாகி லோகோத்தாரம் செய்கிறதற்கு ஸஹாயம் செய்கிறது வித்யாவந்தர்களான புருஷர்களுடைய கடமையல்லவா? இப்படிப் பண்ணுகிறதினலே அவர்களுக்கும் லோகீத்திற்கும் உபகாரமில்லையா? மேலும் ஒரு பெண்ணனவள் வருத்தத்தினல் பெருமூச்சுவிட்டால் அந்த 'வீடே அழிந்துபோகிறதென்று மனுஸ்மிருதியில் சொல்லியிருக்கையில் எவ்வளவோ ஸ்திரீகள் லோகத்தில் அழுகிருர்களல்லவா. இதினலேயல்லவா நம்முடைய தேசமானது இவ்வளவு பரிதாபமான ஸ்திதிக்கு வந்திருக்கிறது. இதையெல்லாம் தப்பிவித்து இவர்களுக்கு ஸரியான வித்யாப்யாஸத்தைப் பண்ணிவைத்தால் அப்பொழுது நம்முடைய தேசமானது எவ்வளவு உன்னத ஸ்திதிக்கு வரக்கூடியது. அதைப்பார்க்கிறதற்கு நமக்கெல்லாம் எவ்வளவு ஸந்தோஷமாயிருக்கும். இதை யோசிக்கிறதற்கு நம்முடைய மஹாவித்வான்களுடைய ஸமூகமானது கவனிக்காமலிருக்கிறது நமக்கு எவ்வளவு துக்ககாமாயிருக்கிறது என்பதைஅவர்களெல்லாம்யோஜித்து இனிமேலாவது ஸ்திரீவித்யாப்யாஸத்தில் மஹா அன்புள்ள நாசிம்மய்யங்கார் கவனித்தமாதிரி கவனித்து அவர்களுக்கு ப்ரோத்ஸாஹமுண்டாக்கி லோகத்தையும் நம்மையும் உத்தாரம் பண்ணுவார்களென்று நம்புகிருேம்.

அபலாஞம்சாஸ்திரபலம்தாதும்ப்ரபலாந்தராத்மதா
[ம்ப்ராப
தாரீகரோதிதர்மதிமம்பாஷ்ரீ:ஸ்வீகரோதுமத்வினதி:

## லலிதாம்பாள் சோபனம்

(60-வது பக்கத்தொடர்ச்சி.)

---

### தேவி பண்டாஸுரன்மேல் யுத்தத்திற்குப் புறப்படுதல்.

90.

ராஜக்கிரகத்தில் வந்து ஸிம்ஹாஸனத்திலே
நாதரோடேகூட இருந்தாள் தேவி—
பசித்தவேர்க்கெல்லாம் அபீஷ்ட வரங்களைப்
பார்த்துக்கொடுத்தாள் அமிர்தக்கண்ணால்!
காமாக்ஷி என்ற பேர்கொடுத்து பிரும்மதேவாள்
காத்திருந்தாள் பதினாயிரம் வருஷம்!
தேவியின் சந்நதியில் தேவாள் காத்திருப்பதை
தேவியிடஞ் சொன்னார் நாரதர், சோபனம்
[சோபனம்.

91.

ஸுரமுனிவேண்டுதலால் தேவர்கிரகங்களுக்குச்
சொல்லியனுப்பினாள் அம்பிகையும்
வாத்தாலேமதங்கொண்டபண்டாஸுரனையினி
வதைக்கவேணுமென்று ஈஸ்வரியாள்
ரதகஜதுரகபதாதிகளுடன் கடல்அலைபோலே
வருகின்றாள் சேனையுடனே!
சதுரங்கமான சக்தி-சேனைகளுடனே
சங்கரி வருகின்றாள் சோபனம் சோபனம்.

92.

ஸ்ரீசக்ரராஜாதத்திற்கொன்பதுதட்டு
ஸ்ரீங்கார உருளைகள் நான்குவேதம்
பூஜ்யமான தர்மார்த்த காமமோக்ஷம்
புநிதமான நான்கு குதிரைகளாம்!
புருஷசூக்தம் கொடிமரம்! அதற்குமேலழகாய்
(ஐந்து) யோஜனையகலமாய் முத்துக்குடை-
முன்னூறு தேர்ப்படை முழுதுஞ் சக்திகள் வா
[ராள்
முழுத்தேரும் தேவிக்குச் சோபனம் சோபன
[ம்

93.

அம்மன் தொட்டியில் இருந்துமொரு தேவி,
சம்பத்கரி என்று முண்டானாள்;
நன்மையாகவேபின்னும்அச்வாருடையுதித்தாள்
நாகபாசத்திலே உண்டாகி;
ஆனைகள் சம்பத்கரிக்குச் சேனை
அச்வாருடைக்குக் குதிரைகளாம்;
தாயார் மந்திரிணியுடைய ஸ்ரீசக்ரத்திலே
தட்டுகளேழுண்டு சோபனம் சோபனம்.

94.

மந்திரிணி தேரிலும் ஸ்ரீசக்ரம்போலே
மகாதேவி சக்திகள் நிறைந்திருக்காள்
விந்தையாப் பதினாறு நாமத்தால் தேவர்கள்
மந்திரிணியை ஸ்தோத்திரங்கள் செய்தார்.
ச்யாமளையுடைய திருக்கையிலிருந்து
தனுர்பாணத்தோடொரு கோதண்டத்தை
நமஸ்கரித்தம்மனை வாங்கியே மந்திரிணி
நாயகி வருகின்றாள் சோபனம் சோபனம்.

95.

தீர்க்கதண்டநாதை ஸ்ரீசக்ரத்தேருக்குத்
திட்டமாக ஐந்து தட்டுக்களும்
கர்க்கிகளான துர்க்கைகளும், அக்னி
துர்க்கைகளும் வன துர்க்கைகளும்,
தர்க்கமில்லாத நல்வர்க்கங்களால் ரண
கர்க்கிசிகாமணி நிஷ்களமாய்
அக்கவர்ணி பக்க வர்க்கங்களால் எங்கும்
எக்காலத்திலும் தற்காப்பள் சோபனம் சோப
[னம்.

96.

வாராகி தேரிலும் சக்திகள் இருக்கின்றார்
வாராகி போன்ற பராக்கிரமமாய்!
கோரமஹிஷம் மிருகம் சிம்ஹம் யாளிமேல்
கூடவருகின்றார் சக்திகளும்!
தண்டெடுத்துவரும் வாராகியைப் போற்றி
அப்ஸரஸ்திரீகளும் தேவர்களும்
கண்டு பனிரண்டு நாமத்தால் வாராகியைக்
கைகூப்பி ஸ்துதிக்கின்றார் சோபனம் சோப
[னம்.

97.

இருபத்தைந்து நாமத்தாலே ஸ்ரீதேவியை
எல்லாத்தேவாளும் ஸ்துதசெய்கின்றாள்!
ஒருவருக்கும் சொல்லக்கூடாது இதுகளை
உனக்குச் சொன்னோம் தன்யன் ஆனதினால்!
இன்னங்கேள் சொல்லுவோம் இனிமேற்றான்
[யுத்தங்கள்
இப்படிச்செகன்மாதா வருகின்றாள்!
பின்னுஞ்சக்திசேனை வருகின்றதைக் கேட்டால்
பில்லி சூன்யந்தீரும் சோபனம் சோபனம்.

98.

குந்தம் ஈட்டி வாள் பரஸு பட்டயம் சத்தி
கோடாலி வில்லம்பு உலக்கைகளும்
மந்திரவாள் சூலம் கலப்பை முசலத்துடன்
வட்டக்கத்திகள் வெட்டுக்கத்திகளும்
வஜ்ஜிரஞ்சமுதாடு கெதைகள் வல்லயமும்
பாணபாசம் சக்ராயுதமுங்கொண்டு
வஜ்ஜிரமாகிய மந்திரிணி வாராகி சேனையும்
வருகின்றதிப்படிச் சோபனம் சோபனம்.

99.

பச்சைவர்ணி, சிறுபச்சைவர்ணிப். பொது
பிச்சித்தொங்கல் வர்ணி, மஞ்சள் வர்ணிகள்,
முச்சந்திவர்ணி, முழுதும் நீலவர்ணி,
மிச்சமுள்ள ஐந்து வர்ணிகளும்

துர்க்கை பிடாரியும் சடைச்சிகளும்
தூய்ய வடிவுள்ள கேசிகளும்
கர்க்கியும் காளியும் இளங்கோபாளியும்
காளமேகம் போல்வாரான் சோபனம் சோபன
[ம்.

100.

பத்ரகாளிகள், ரணபத்ரகாளிகள், வீர
மர்த்தனகாளிகள் ருத்ராகாளிகளும்
நெற்றியில் நெருப்புக்கள் உள்ள காளிகளும்
சுத்தி வட்டமாய் வந்துறுமிக்கொண்டு—
அஷ்ட நாகங்கள் அவர்களுக்காபரணம்
அல்லாமலும் ரத்னக்கிரீடமுதல்
பட்டையாணுள் ஒட்டியாணஞ் சலங்கைமுதல்
பணிகளும் அவர்க்குண்டு சோபனம் சோபன
[ம்.

101.

கையில் முறுக்குவளை கணையாழி மோதிரம்
கனத்தகொங்கைக்கவசஞ் சரப்பளியும்
துய்யவர்ணப்பட்டு துலங்கும் தோடும் தக்கை
சோபிதமாய்த் தொங்கும் முருகுமுதல்
சந்திரப்ரபை சூர்யப்ரபைதலையின்பின்னல்
சதுரான ராக்கோடி குஞ்சலமுங் காட்டை
சிந்தூர சக்திகள் சுபசகுனங்கண்டு
தொகை தொகையாய் வாரான் சோபனம்
[சோபனம்.

102.

இன்னமுண்டு வைரவான் பூதகணங்கள்
இந்தச்சேனை எண்ணத்தொகைகள் இல்லை!
சொன்னேமின்னம் இவர் வாகனங்களைக்கேள்
தொகையில்லாத் தேர்களும் யானைகளும்
வாயுவேகமான வேகக்குதிரையும்
ஆயிரங்கோடி ஸிம்ஹ வாகனங்களும்
வாயு கெருடனுக்கும் பூதங்கள் முதலாய்
வாகனங்களில் வாரான் சோபனம் சோபனம்.

103.

ஆலவட்டம் வெண்கத்தி குடைகள் கொடிகள்
[கொண்டு
அஸுராள்மேல் கோபிஷ்டைகளாக
கோலாகலமாய்யுத்த பேரிவாத்யம்முழங்க
கொடிபறக்க அணியணியாகவாரான்!
தேவ வாத்யம் முழங்க கந்தர்வர் கானம்பண்ண
தேவதாஸிகள் நாட்டியமாடிவா
தூயமுனிவர் மலர்சொரிய லலிதேஸ்வரி
சுகத்துடன் வருகிறுள் சோபனம் சோபனம்.

---

யுத்த ஆரம்பம்.

---

பண்டாஸுரன், சேனைகளை யுத்தத்திற்கு அனுப்புதல்.

104

தேவியுத்தத்துக்கு வருகின்றதைக்கேட்டு
திங்கிட்டுப் பண்டாஸுரன் சபையில்
கோபத்துடனே சிம்ஹாஸனத்திலிருந்துகொண்
கூடியே அஸுராளோடு யோஜித்தான்! [டு
இடிபோல் அட்டகாசஞ்செய்தான், கோட்டைவா
[சல்க
ளெல்லாவற்றிற்குங்காவல் வைக்கச்சொன்ன
[ன்.
குடிலாக்ஷன் மந்திரியை யுத்தத்திற்கனுப்பினன்
கோபிஷ்டை லலிதைக்கு சோபனம் சோபன
[ம்.

105.

அஸுரபதியுடைய வார்த்தையைக்கேட்டு-மந்திரி
அதிகசைன்யஞ் சேனதிபதிகளுடன்
இசைந்த நாற்பது அக்ஷோகிணி சேனைகளைக்கொ
[ண்டு
எல்லா வாசல்களையும் காக்கச்சொன்னன்!
தர்மதனை யுத்தத்திற்குப் போகும்படிச்
சொல்லியனுப்பினன் சேனையுடன்;
தர்மதனை சம்பத்கரியம்மன் வதைத்து
நிர்மூலமாக்கினள் சோபனம் சோபனம்.

106.

ஓரண்டி சம்பத்கரியால் உருண்டான் தர்மதனென்று
[ன்று
மருண்டுவந்தஸுரர்கள் முறையுமிட்டார்கள்;
வெருண்டு பண்டாஸுரன் குரண்டனையனுப்பி
[னன்
சுருண்டான் அவனும் அச்வாரூடையாலே;
புரண்டான் குரண்டனென்று தப்பிஓடிவந்தபேர்
மருண்டபண்டனிடம்மொண்டுசொன்னர்கள்;
கரண்டிஎண்ணெயைக்காய்ச்சி வரண்டிப்புண்ணில்
விட்டாற்போல் கலங்கினன் பண்டனும் சோப
[னம் சோபனம்.

107.

காங்கர்முதலைந்து சேனதிபதிகளையும்
துரங்காதி சேனையோடனுப்பிவைத்தான்
கடுவிஷமாயையை சர்ப்பேணி பிசாசையும்
துரங்கனோடேகூட அனுப்பிவைத்தான்
பாவி சர்ப்பேணி அஸுரன் ஆக்கினையாலே
பாம்புகளைப் பெற்ருள் தன் தேகத்தில்!
ஏவினள் பாம்புகளைச் சர்ப்பேணி சத்திகள்மேல்-
எல்லா சக்திகட்குஜயம் சோபனம் சோபனம்

108.

விதவித சர்ப்பங்கள் விஷத்தைக் கக்கிக்கொண்டு
விழுந்ததுகள் சக்தி சேனையின்மேல்!
இதைக்கண்டு நகுலியம்மன் கெருடன் தோளில்
இருந்ததி வேகமாய் ஓடிவந்து
பாம்புக்கு மிர்த்யுவாம் கீரிப்பிள்ளைகளை
பல்லுகளிலிருந்து விழவடித்தாள்!
அம்மட்டுப் பாம்பையும் துண்டமிட்டதுகள்
அம்மன் கீரிப்பிள்ளைகள் சோபனம் சோபனம்.

109.

கீரிக்கொண்டு கீரிப்பிள்ளைகள் ஒன்றாய்க்கூடி
சேனையானை குதிரை அஸுரான் மேலே
ஏறிப்பிடித்துக் கடித்தக்ஷோகிணிகளை
எல்லா அஸுரப்பேயை நொறுக்கித்துக்கள்!
ஐந்து சாவகர் கழுத்துகளையும்
பிஞ்சுபோல் நறுக்கினாள் நகுலேஸ்வரி!
அஞ்சாத நகுலிக்கு அங்கே தேவிமணியம்
அம்மன் மந்திரிணி ஈந்தாள் சோபனம் சோப
[னம்.

110.

இவர்போனபின், பண்டாஸுரனனுப்பினான்
எழு பிலாஸ்கார் மந்திரி ராணுவமும்
அவர் கண்ணில் சூரியனை வருத்தி வாத்தாலே
அம்மன்சேனையை ஸ்தம்பிக்கச்செய்தான்!
பிலாஸ்கரர் ஸ்தம்பனத்தைக் கண்டு தேவியின்
ஆக்கினையால் தண்டினி விசையாய் வந்தாள்
குருடாக்கி முன்னேழு மந்திரிதலைகளைக்
கொய்து மாலை தரித்தாள் சோபனம் சோப
[னம்.

111.

மடிந்தார் மந்திரி என்று கேட்டுப்,பண்டாஸுரன்
வந்து தம்பிமார்களுடன் யோசித்து
குடிலாக்ஷனைப் பின்னுஞ் சேனையோடனுப்பின
[ன்
கொட்டி பெரிய யுத்தம் பண்ணசொன்னான்.
லலிதையைப் பிடித்துக்கொண்டுவரச்சொல்லி
ஒளித்தனுப்பினான் தம்பி விஷங்கனையும
களவுசெய்யச்சொன்னான் பதினைந்துஅஸுரனு
[டன்
காமேஸ்வரிக்கு ஜயம் சோபனம் சோபனம்.

112.

அஸ்தமித்தபின்னே மலகன் முதல் பதினைந்து
அஸுரர்களோடே மெள்ளவந்து
சுற்றிலும் பதினைந்து அக்ஷோகிணியால் சேனை
சுத்தி வளைந்துகொண்டான் விஷங்கனப்போ!
தேரின் முதற்றட்டில் இருக்கின்ற சக்திகள்
தேவிக்கு முறையிட்டு அலறினார்கள்.
கோரமாக்குடிலாக்ஷன் யுத்தஞ்செய்கிறான்
குறைவில்லை லலிதைக்குச் சோபனம் சோப
[னம்.

113.

பின்னே கள்ளர்வந்து செய்யுங்கலகத்தைப்
புரட்டுச் செய்கையைத் தேவியறியாமல்
முன்னே தண்டநாதை செய்கின்ற சண்டையின்
வேடிக்கை பார்த்து அம்மனிருந்துவிட்டாள்!
துரோகி விஷங்கன் ஒரு பாணத்தால் தேரின்
துலங்குங் கொடிதன்னை அரிந்துவிட்டான்!
வேகமாப்புருவங்களை அம்மன் கோபத்தால்
வில்லுப்போல் வளைத்தாள் சோபனம் சோப
[னம்.

114.

மாதாமுகத்தினுட கோபத்திலிருந்து
மானிகள் பதினைந்து காமேஸ்வரிகள்
பாதக அஸுரனைக் கொல்ல அனுப்ப அம்மன்
புறப்பட்டாள் ஜ்வாலா மாலினிமுதல்;
மலகன் முதற் பதினைந்தஸுரரையும்
வந்த சேனையுங்கொன்றான் காமேஸ்வரிகள்.
மெலிந்த விஷங்கனைக்கொல்லாமல் துரத்தியே
லலிதையின் முன்வந்தார் சோபனம் சோப
[னம்.

115.

குடிலாக்ஷனையுந் துரத்தினாள் வாராகி
கூடவந்தஅஸுரரைக் கொன்றாள்!
விடியற்காலங்கண்டு விஷங்கன் செய்ததுகளை
விசையாக மந்திரிணி தண்டநாதையுமாய்
அம்பாளிடத்திற் சொல்லி ஜ்வாலாமாலினியாலே
அக்னிக்கோட்டையைப் போடச்சொன்னான்!
தென்புறம் வீதியொருயோஜனை வாசலில்
ஸ்தம்பினியுங் காவல் சோபனம் சோபனம்.

116.

முப்பது யோஜனை உயரமுள்ள கோட்டை
முழுதும் நூறு யோஜனை சுற்றளவு—
இப்படி ஸ்ரீசக்ரத்தேருஞ் சேனையுங்கொண்டு
இருக்கின்றாள் சக்திகள் தீக்கோட்டைக்குள்
தம்பியும் மந்திரியும் தப்பிவந்ததையும்
சலியாத தீக்கோட்டை மகிமைகேட்டு
அன்பாய் முப்பது பிள்ளைகளைப் பண்டன் சண்
[டைக்கு
அனுப்பினான் தேவிமேல் சோபனம்சோபனம்.

——()——

லலிதாகுமாரியாகிய-பாலாம்பிகையால்
பண்டபுத்திராள்வதம்.

117.

பண்டபுத்திராள் சண்டைக்கு வந்ததைக்கண்டு
பாலாம்பாளைத்தேவியனுப்பி வைத்தாள்.
கண்டித ரதத்தினில் ஏறிக்கொண்டு வந்தாள்
தண்டினி மந்திரிணி துணையாய் வந்தாள்.
பண்டபுத்ராளையும் வந்த அஸுரரையும்
கண்டங்கண்டமாய் சேதித்துத் துண்டமிட்டா
மண்டலம் புகழ்த்தேவாள் புகழ பாலை [ள்!
மாதா அருகில்வந்தாள் சோபனம் சோபனம்.

## விநாயகமூர்த்தியால் விக்னயந்திரத்தை அழித்தல்.

118.

பாலாதேவி கையால் பிள்ளைகள் மாண்டதைப்
பண்டன் கேட்டுப்புலம்பி அழுதான்மெத்த-
கொலைபாதகன் விக்னயந்திரஞ் செய்யச்சொல்லி
கொடூரன் விசுக்கிரனை அனுப்பிவைத்தான்-
துஷ்ட விசுக்கிரன் அக்னிக் கோட்டையில்வந்து
சுற்றி உள்ளே போகமாட்டாதே-
கெட்டவன் பாறையில் எட்டுத் தேவதையந்திரம்
கீறி எவினன்கேளும் சோபனம் சோபனம்.

119.

யந்திரத்தால் சக்திகள் புத்தி மயங்கியே
எல்லாரும் ஸ்தம்பித்து இருந்தார்கள்-
தண்டினி மந்திரிணி அம்பாளிடத்திற் சொல்ல
மாதாவுங் காமேசர் முகத்தைப்பார்த்தாள் !
சத்தி கணபதி சுத்தலக்ஷணமுடன்
திடுமென்று குதித்துவந்து யந்திரத்தை
குத்தித் தன்கொம்பாலே தூளாய்ப் பறக்கவிட்ட
குஞ்சர முகருக்குச் சோபனம் சோபனம்.

120.

காதிலே ழுகோடி சேனைகளை
கணபதியுமப்போ உண்டாக்கி—
அதிபதியாறு சேனாபதிகளும் சிருஷ்டித்து
அந்த விசுக்கிரன் சேனைகளை
அடியோடும் வதைத்து, அவன் (சேனாபதியாம்)
ஆனைமுகாஸுரன் தன்னையும் அந்தக்ஷணமே
[வதைத்துவிட்டார்.
அம்பாள் வரங்கொடுத்தாள் கணபதிக்கப்போ
அனைவரும் பூஜிக்கச் சோபனம் சோபனம்.

——()——

## பண்டாஸுரன் தம்பிகள் இருவரின் வதை.

121.

சக்திகளுக்குமப்போ புத்திதெளிந்தது
சமயன்முன் ஓடிப்போனான் விசுக்கிரன்.
பித்தன் பண்டாஸுரன் விசுக்கிர - விஷங்கனை
பின்னுமனுப்பினான் ஜயிக்கச்சொல்லி—
இருவரும் நானூறு அக்ஷோகிணி சேனையுடன்
எல்லாச் சேனாபதியுங் கூட்டிக்கொண்டு
ஆடம்பரமாய் அக்னிக்கோட்டை வாசலில்
(வந்தார்): அந்தச் சக்திகளுக்குச் சோபனம்
[சோபனம்.

122.

விசுக்கிரனோடெதிர்த்தாள் மந்திரிணியும் பொல்
விஷங்கனை எதிர்த்தாள் வாராகிதேவி. [லா
அச்வாரூடை முதலான பேரெதிர்த்தாள்
அந்தச்சேனைகளக்ஷோகிணிகளையும்!
வஞ்சக விசுக்கிரன் பாண வருஷத்தால்
வாடிமெலிந்து சக்திசேனைகளும்—
அம்பாளின் சேனைகள் அஸ்திரத்தின் தாபத்தால்
அம்மனைவேண்டினர் சோபனம் சோபனம்.

123.

மந்திரிணி உரையாலே வாராகிசிந்துவை
சக்திகள் தாபந்தீர அழைத்தாள்—
வந்துசொரிந்தது சுத்தகங்கா தீர்த்தம்
வாரணத்துதிக்கைபோல் இரண்டு சாமம்
வேண்டியமட்டும் குடித்தே சக்திகளெல்லாம்
வெகுதாகந்தீர்த்து பெலமடைந்து —
தேகக்களைகள் தீர்ந்து சக்திசேனைகளெல்லாம்
ஜயத்துடன் எதிர்த்தார்கள் சோபனம் சோப
[னம்.

124.

வந்தக்ஷோகிணி தன்னில் ஒன்றரைப்பங்கையும்
மந்திரிணிவதைத்தாள் விசுக்கிரனையும்—
சீறிக்கொண்டுவதைத்தாள் ஒன்றரைப்பங்கு சே
தண்டினிவதைத்தாள் விஷங்கனையும் [னை
வந்த சேனைகளின் மற்ற ஒருபங்கையும்
மருண்டிட வதைத்தாள் அச்வாரூடை!
அறிந்துகொள் மூன்றுநாள் யுத்தமுடிந்ததினி
அம்மனுக்கே ஜயம்! சோபனம் சோபனம்.

———

(இன்னும் வரும்)

ஆர். எஸ். சுப்பலக்ஷ்மி அம்மாள்.